


# முகவுரை

கடல் சூழ்ந்த இந்த உலகத்தின் கண்ணே மனுஷ ஜன்மமே உயர்ந்தது. அந்தச் ஜென்மம் கிடைத்தபோதே யோகஞானங்களை அநுபவித்து மோக்ஷத்தைப் பெறவேண் டியது அவசியம். அந்த யோகஞானங்களைச் சாதனஞ் செய்வதற்காகத் தேகத்தை இறவாமற் பாதுகாக்கக் கற்பசாதனஞ் செய்யவேண்டும். அச்சாதனங் கைகூடத் திரவியம் வேண்டும். அந்தத் திரவியத்தைப் பலவகை யாகத் தேடாதபடி இருந்தவிடத்திலிருந்தே சம்பாதித்துக் கொள்ளும்பொருட்டு "இரசவாதம்" என்னும் ஒரு அரிய வித்தையை நூல்களின் வழியாக முன்னோர்கள் சொல்லி யிருக்கின்றனர். அந்த இரசவாதம் கைகூடப் பெறவேண் டியவன் இன்ன லக்கினத்தானும் இன்ன கிரக வரிசை யுடையவனுமாவான் என்பதையும் சொல்லி யிருக்கின்ற னர். இப்படியெல்லாம் இருக்கப் பலபேர்களும் அந்தத் தெய்வீகமான இரசவாதத்தைச் செய்யப்புகுந்தால் அது கைகூடுமோ? கூடாது. இதுநிற்க,

மேலே சொன்ன இரசவாதங்கள் இதுவரைக்கும் ஆங்காங்குச் சிதறிப் பிழைபட்டுப் பலவகையாக இருப்ப தால், அவைகளை அவரவர்கள் மனம்போனபடியே செய்து,

இருக்கிற திரவியத்தை யிழப்பதுமல்லாமல் தேக கஷ்ட
தையும் பெற்றுத் தடுமாறுகின்றனர். ஆகையால், என்
ஆனவரைக்கும் அவைகளிற் சிலவற்றை எடுத்துத் திரு
அவைகளுக்குத் தக்கவாறு நான் பெரியோர்கள் மூலமா
கேட்டபடியே ஒருவிதமாக அர்த்தமும் எழுதி "வா
கோவை" என்று பேரிட்டு ஒருநூல் அச்சிட்டு வெளியிட
துணிந்தேன்.

மா. வடிவேலன்.

பதினெண்சித்தர்

திருவாய்மலர்ந்த

# வாதக்கோவை

## வாத சித்தியடைவோர் இலட்சணம்

## பாயிரம்

பார்த்திடவே நந்தீசர் மூலமூர்த்தி
பண்பான வகத்தீசர் சட்டைநாதர்
கோர்த்திடவே பதஞ்சலியுங் கூனர்கண்ணர்
கோரக்கர் கமலமுனி சண்டிகேசர்
கூர்த்திடவே யிடைக்காடர் சிவாயசித்தர்
கொங்கணைய ரவர்தந்தை போகநாதர்
கார்த்திடவே மச்சமுனி புண்ணாக்கீசர்
காலாங்கி சுந்தரருங் காப்புத்தானே.

(பொழிப்புரை) கயிலாசத்திற்கு முதற்காவலரான நந்தீஸ் ரரும், திருமூலரும், அகஸ்தியரும், சட்டைநாதரும், பதஞ்சலி ரும், கூனரும், அழுகண்ணரும், கோரக்கரும், கமலமுனியா ம், சண்டிகேசரும், இடைக்காடரும், சிவவாக்கியரும், கொங்க ரும், அவர் தகப்பனரான போகரும், மச்சமுனியாரும், புண் க்கீசரும், காலாங்கிநாதரும், சுந்தராநந்தரும் (ஆகிய பதினெண் த்தர்களும்) இந்த நூலைப் பாதுகாக்கவேண்டியது, எ - று. (1)

வானைத்தா வியபொதிகை மகத்தான
ரிஷியுடைய வாக்குநேர்மை
பானைத்தா வியபூசைப் பரிவான
சிவயோகப் பண்பேர்கேளும்
மீனைத்தாவியராசி விளங்கிநின்ற
கன்னிமுதல் வில்லுமேடம்
சேனைத்தா வியதுலாச் சென்மரா
சிக்கருவைச் செப்புறேனே.

(போ - ரை.) ஆகாயம் வரைக்கும் உயர்ந்து நீண்டிருக்கின்ற பொதிகைமலையில் எழுந்தருளி யிருக்கும் அகஸ்தியமுனிவர் திருவாய்மலர்ந்த பூசாவிதியை, சிவயோக சாதனையுள்ள பெரியோர்களே நீங்கள் கேட்பீராக. (அது என்னவென்றால்) கன்னியாராசிமுதற்கொண்டு, தநுசுராசி, மேஷராசி, துலாராசி ஆகிய இந்தச் சென்மராசிகளின் மூலக்கருத்தைச் சொல்லுகின்றதை, எ-று.

செப்புகிறேன் துலாத்தோர்க்குத் தேவிமுதல்வாசி
சிவனோடு மந்திரங்க ளெல்லாஞ்சித்தி
ஒப்புகிறேன் குளிகைசித்தி வாதஞ்சித்தி
உகந்துநின்ற காயசித்தி யுறுதியாகும்
தப்புகிறே னென்றாலும் தவறொட்டாது
சாதகமாய் வாசனையாய்த் தானேதூக்கும்
கொப்புகிறே னுலகத்தில் தசதீக்ஷைபெற்று
கொடியசிவ யோகியெனக் கூறுவாரே.

(போ - ரை.) யாரொருவர் துலாராசியில் பிறந்தாரோ, அவர்களுக்கு, தேவிமுதலாகவாசி, சிவன், மந்திரங்கள், குளிகை, இரசவாதம் இவைகளும், காயத்தை அழிவு படாதபடி நிறுத்துவதும் ஆகிய சித்திகள், அவர்களுக்கு வேண்டாமென்றாலும் தவறாமல் கைகூடும், (ஏனென்றால்) அவர்கள் பிறந்த ராசியின் வாசனையாலாகும். இவர்கள் உலகத்தில் பத்துத் தீக்ஷைகளையும்

கிரமமாகக் குருவருளாற்பெற்று மற்றவர்களால் சிவயோகிக ளெனக் கொள்ளப்படுவார்கள், எ - று. (3)

கூறியதோர் கன்னிமுதல் மீனத்தோர்தான்
கோடியவர் வணிகரைப்போல் கூர்ந்துசெய்வார்
ஆறியதோர் மனம்பார்த்துப் பின்புகொள்வார்
ஆசைகொண்டு வெகுமனதா யாலோசிப்பார்
தேறியதோர் வாசியிலே மூண்டுநிற்பார்
தேவியவள் பூசையிலே திறமோ கொஞ்சம்
மாறியதோர் மனம்பிடித்தால் வாதஞ்சித்தி
மயக்கமற்றூற் காயசித்தி மருவுந்தானே.

(போ - ரை.) சொல்லுகின்ற கன்னியா லக்கினத்தில் பிறந்த வர்களும், மீனலக்கினத்தில் பிறந்தவர்களும், அதிகமான வர்த்த கங்கள் செய்வார்கள், மனத்தில் ஒன்றின்மேல் எண்ணம் வைத் தால் அதைத்தீர ஆலோசித்து செய்வார்கள், சரமாறுதலான யோகாப்பியாச வழியாகிய வாசிப்பழக்கத்தில் அதிக தீவிரதா முடையவர்களா யிருப்பார்கள்; ஆனல் சத்திபூசையில் கொஞ்சம் உறுதியிருக்குமேயொழிய மிகுதியும் இராது. அப்படி இருந்தாலும் அவர்களுக்குப் பலவகையாக ஓடுகின்ற மனமானது ஒடுங்கி நிற்கும் பட்சத்தில் இவ்விடத்தில் சொல்லப்பட்டு வருகின்ற இரசவாத மானது கைகூடும், மனமாய்கை நீங்கிஞலோ (காயத்தை உறு திப்படுத்துவதான காயசித்தியும் உண்டாகும், எ - று. (4)

தானென்ற கடகமுதல் தநுசோர்கேளு
சாதகமாய்க் கொண்டேறித் தாயைப்போற்றி
வானென்ற சமாதியிலே நின்றுதேறி
வாதசித்தி வாசிசித்தி வரவேசெய்வார்
கோனென்ற குருபதத்தை யடுத்துக்காப்பார்
குறையாமற் சாத்திரத்தைத் தேடிவைப்பார்.
வேனென்ற மாய்கையிலே மனதுகொள்வார்
வேதாந்த சாத்திரத்தில் விளங்குவாரே.

(போ - ரை.) கடகலக்கினத்தில் பிறந்தவர்களும் தநுர்லக்கினத்தில் பிறந்தவர்களும், ஆறுதார யோக நிலைகளைப் பழக்கமாயேறுவதுபோ லேறிப் பிரமபீடத்தி லெழுந்தருளி யிராகின்ற மனோன்மணித் தாயை நமஸ்காரஞ் செய்து சமாதியோகத்தை அடைந்திருப்பார்கள். அவர்களே இரசவாதத்தையும் வாசிமார்க்கத்தையும் கைகூடும்படி செய்துகொள்வார்கள். குருவுபதேசப் பிரகாரமிருந்து அவரை இடைவிடாமல் நமஸ்காரஞ்செய்வார்கள். அதிகமாகச் சாஸ்திரங்களைச் சம்பாதித்து வைப்பார்கள். மாயா விஷயத்தில் மனதைச் செல்ல விடமாட்டார்கள். எப்பொழுதும் வேதாந்த மார்க்கத்திலேயே பழகிக்கொண்டிருப்பார்கள், எ-று. (5)

விளங்கிநின்ற மற்றேழு ராசியோர்கள்
வெறும்பேச்சாய்த் திரிவார்கள் சித்தியில்லை
புளங்கிநின்ற பூசைக்குள் வருவேனென்பார்
புகுந்தாலு மாயத்தே புணர்ச்சிசெய்வார்
தளங்கிநின்ற வாதத்தைச் சுட்டுமாய்வார்
சாத்திரமுங் குருத்தேடார் தானேயென்பார்
அளங்கிநின்று மலைவார்க ளறிந்துகொள்ளா
ரவரேழு ராசியோ ரறைந்திட்டேனே.

(போ - ரை) (மேற்சொன்ன ஐந்து லக்கினமும் போக) இன்னும் இருக்கின்ற மேஷம், ரிஷபம், மிதுனம், சிங்கம், விருச்சிகம், மகரம் என்கிற ஏழு லக்கினத்தில் பிறந்தவர்களெல்லாம் வீண்பேச்சுப் பேசித் திரிவார்களேயொழிய இரசவாதமும், ஞான மார்க்கமும், இன்னும் தேவிபூசை முதலியவைகளும் சித்தியடைந்தவர்களாக மாட்டார்கள், ஆனால் அவர்கள் பலவகையான பூசைகளையும் செய்வேனென்று சொல்லித் திருட்டுச் சோரத்துவம் செய்வார்கள், இரசவாதத்தைச் சுட்டுச்சுட்டுக் கெடுவார்கள், சாஸ்திரவிசாரணை செய்யமாட்டார்கள், குருபதேசம் அடையும் நிமித்தம் போதனு குருவைத் தேடமாட்டார்கள். எல்லாம் தாங்களே யென்பார்கள். இன்னும் மயங்குகின்ற பலவகையான நியாயங்களை யெல்லாம் செய்வார்கள், ஆகையால் மேற்சொன்ன ஏழுலக்கினத்

இல் பிறந்தவர்களுடைய குணகுணங்களை மாணக்கனுகிய நீ அறிந்துகொள்வாயாக, எ - று. (6)

அறைந்திட்ட ராசிக்கு விபரங்கேளா
யப்பனே யுத்திரமு மத்தத்தோடு
நிறைந்திட்ட சித்திரையுஞ் சுவாதியானல்
நிலைக்குமடா காயசித்தி யோகசித்தி
பறைந்திட்ட மூலமுத லுத்திராடம்
பாங்கான வசுபதியும் பரணிதானும்
உறைந்திட்டு நின்றதோ ருத்திரட்டாதி
யுத்தமனே ரேவதியு மெத்தநன்றே

(போ - ரை.) மிகவும் புனிதனுன புலத்தியனே நான் சொல்வதைக்கேள் மேலேசொன்ன லக்கினங்களோடு சேர்ந்தால் நன்மையை யடையத்தகுந்த நட்சத்திரங்கள் எவையென்றல் உத்திர நட்சத்திரமும், அஸ்த நட்சத்திரமும், சித்திரை நட்சத்திரமும், சுவாதி நட்சத்திரமும், மூல நட்சத்திரமும், உத்திராட நட்சத்திரமும், அசுவினி நட்சத்திரமும், பரணி நட்சத்திரமும், உத்திரட்டாதி நட்சத்திரமும், ரேவதி நட்சத்திரமும் யோகசித்தி பெறுவதற்கும் காயசித்தி பெறுவதற்கும் இரசவாதசித்தி பெறுவதற்கும் ரொம்பவும் நன்மையான நட்சத்திரங்களாகும், எ-று. (7)

இரசவாதசித்தி வருவித் தெழுதப்பட்டது.

---

நன்றான கோளோடு ராசியானல்
கரசெனன னல்லனடா சித்தன் சித்தன்
கன்றுண கோள்நின்ற ராசிதொட்டு
கண்டுகொள்ளா யங்கிசத்தின் பலத்தைச் சொல்வே[ன்]
ஒன்றான கர்க்கடக வங்கிசத்தி
லுத்தமனே மதிநிற்க வேண்டும் வேண்டும்
தன்றான துலாவான வங்கிசத்தில்
சகல சித்தாஞ் சுக்கிரன்று னிருக்கப்பாரே.

(போ - ரை.) மேலேசொன்ன நல்ல லக்கினங்களில் சுபக்கிரகங்கள் இருக்குமானால் அவன் நரசென்மத்தில் பிறந்திருக்கிறவனானாலும் நரனாகமாட்டான் சித்தனாவான். ஆகையால் அந்தந்த லக்கினத்தில் கிரகங்கள் நிற்கவேண்டிய முறையைச் சொல்லுகிறேன் தெரிந்து கொள்ளுவாயாக. (அவை எவையென்றால்) மேலேசொன்ன கடகலக்கினத்தில் சந்திரன் இருக்கவேண்டும். துலாலக்கினத்தில் சுக்கிரன் இருக்கவேண்டும். அப்படியிருந்தால் அந்தச் சாதகன் சகல சித்திகளையும் அடைவான். நீ பரிட்சிக்க வேண்டுமானால் பரீட்சித்துப்பார், எ - று. (8)

பாரப்பா தநுசாகு மங்கிசத்தில்
 பாங்கான வியாழந்தா னிருத்தனன்று
நேரப்பா விருச்சிக வங்கிசத்தில்
 நேர்ந்தொரு செவ்வாய்தா னிருத்தனன்று
வேரப்பா சிங்கமென்ற வங்கிசத்தில்
 வேதாந்த விதிநிற்க மெத்தநன்று
காரப்பா கும்பமென்ற வங்கிசத்தில்
 காரிநின்றால் காயசித்தி கைக்குள்ளாச்சே.

(போ - ரை.) தநுர்லக்கினத்தில் வியாழனிருந்தால் நல்லது விருச்சிக லக்கினத்தில் அங்காரக னிருந்தால் நல்லது. சிம்ம லக்கினத்தில் புதன் இருந்தால் நல்லது. கும்பலக்கினத்தில் சனி இருந்தால் நல்லது. (என்ன நல்ல தென்றாலோ) காயசித்தி, வாதசித்தி, யோகசித்திகள் கைகூடுமென்பதற்கேயாம், எ - று. ()

ஆச்சப்பா கன்னியென்ற வங்கிசத்தி
 லாச்சரியம் புதனின்றால் ஞானியாவான்
மாச்சப்பா விப்படியே யங்கிசங்கணின்றால்
 மாசித்தன் மாசித்தன் வாதஞானி
ஒச்சப்பா விலைவிட்டு வரவுவீட்டி
 லுயர்ந்துநின்ற வங்கிசத்தில் கிரகம்நின்றால்

மூச்சப்பா வற்றிடத்தே வாசிசித்தி
 மூதண்ட காயசித்தி யாகுந்தானே.

(போ - ரை.) கன்னியா லக்கினத்தில் புதனிருந்தால் அவன் ஞானவானவான். மேலேசொன்ன பிரகாரமே ஒவ்வொரு லக்கினத்திலும் ஒவ்வொரு சுபக்கிரகங்கள் இருந்தால் அவன் சித்தனுகவும், இரசவாதஞ் சித்திக்கப் பெற்றவனுகவும், ஞானவானுகவுமிருப்பான். (இதுவுமல்லாமல்) வாக்கிய ஸ்தானுதிபதியானவன் அந்தப் பாக்கியஸ்தானத்திலேயே யிருப்பானேயானுல் அவனுக்கு வாசிசித்தியும் காயசித்தியும் உண்டாகும், எ - று.

இப்படி யெல்லாம் இரசவாத சித்தியை யடைய விரும்புவோனுக்கு இலட்சணங்கள் சொல்லியிருப்பதால் எல்லாருக்குமே அந்த இரசவாதம் சித்தியாதென்பது உண்மையே. அப்படியிருக்க இந்நூல் என் பிரசிப்பித்தனை என்முல் ஆ! நன்று வினவினுய்; அந்த இலட்சணத்தோடு கூடியவர்களும் தத்தம் மனதுக்கேற்றபடி செய்து வருந்தாதிருக்கும்படி இந்நூலை வெளியிட்டோம் என்க. இனி நூல் வருமாறு. (10)

முற்றிற்று

---

# ஸ்ரீ நந்தீஸ்வரர்

திருவாய் மலர்ந்தருளியவை

---

## காப்பு

வாத முறையை வகையா யுரைக்கப்
போதவானை பொன்னடி பணிவாம்.

## கறியுப்புக்கட்டு

பணிந்திடவே செவந்தகுரு மானைப்போலும்
பார்த்தரைத்தே யுப்புக்குக் கவசஞ்செய்து
எணித்திடவே சீலைமண் கஜபுடத்தி
லிட்டிடவே கறியுப்புக் கட்டிப்போகும்
துணித்தகறி யுப்பதிலே கழஞ்சதொன்று
சொல்லாதி லிங்கமது வராகனென்று
விணித்த தாளகமொன்று வீரமொன்று
வெடியுப்புச் சீனமிவை வராகனென்றே.

(போ - ரை.) காட்டில் திரிகின்ற மானைப்போல் ஒரு வகையாகச் செவந்திருக்கின்ற குருவண்டு என்று சொல்லும் ஜெந்துவைக் கொண்டுவந்து ஒருபலம் உப்புவுக்கு 5 - பலம் ஜெந்துவை அரைத்துக் கவசஞ்செய்து எழு சீலைமண் செய்து 10 - வறுட்டியில் புடம்போட மேற்படி உப்புக்கட்டிப்போகும். அதை அப்படியே வைத்துக்கொண்டு வேறே கறியுப்பு ஒன்றேகால் வராகனெடையும், சாதிலிங்கம் ஒரு வராகனெடையும், தாளகம் ஒரு வராகனேடயும், வீரம் ஒரு வராகனெடையும், வெடியுப்பு ஒரு வராகனெடையும், சீனாகாரம் ஒரு வராகனெடையும் நிறுத்து வைத்துக்கொண்டு, எ - று. (1)

ஒன்றுவரா னெடைவீதம் பழச்சாற்றுலே
யுற்றரைத்துக் கட்டுப்பு மேலேபூசி

அன்றுரவி காயவிட்டுக் குகையிலிட்டே
யந்தவாய் வட்டோடு மூடிமண்செய்
நின்றுசாயங்காலம் காடாக்கினியெரித்து
நீயெடுத்துப்பார்க்கவே களங்கதாச்சு
வென்றி தாமிரமொன்று வெள்ளிநாலு
வேதித்து மட்டமிட்டுப் பாருவேதை.

(போ - ரை.) மேலேசொன்ன சரக்குகளை யெல்லாம் கல்வத்திற்போட்டுப் பழச்சாறுவிட் டரைத்து மெழுகுபதமான போது முன்னே கட்டிவைத்திருக்கின்ற உப்புக்கட்டுக்கு மேலேபூசி அன்றைக்கெல்லாம் வெயிலில் காயவைத்துப் பிறகு அந்தக்கட்டை ஒரு மூசைக்குள் இட்டு மேலே ஓடுமூடிச் சீலைமண் செய்து ஒரு வாயகன்ற சட்டிக்குள் மணல்கொட்டி, அந்த மணலுக்கு நடுவில் இந்த மூசையைவைத்து மேலும் மணல்கொட்டி மேல்சட்டி மூடிச் சீலைமண் செய்து அன்று சாயங்காலமே காடாக்கினித் தீயிட்டு எரித்துச் சட்டி நன்றாய்ச் செவந்த பக்குவத்தில் ஒரு வகையான நாற்றம் உண்டாகும், அந்தச்சமயத்தில் மேலே சொன்ன சட்டியை யிறக்கி ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்க்க களங்காயிருக்கும் இதை வைத்துக்கொண்டு, நன்றாய்ச் சுத்திசெய்த செம்பு ஒரு பங்கும் வெள்ளி நாலுபங்குமாகச் சேர்த்து இரண்டையும் உருக்கி அவைகள் உருகி நன்றாய்க் கலந்து கண்விட்டாடுஞ் சமயத்தில் மேற்படி களங்கில் ஒரு பங்கு எடுத்து அதில்போட்டு ஊதினால் பழுத்து நிற்கும், பிறகு இதையெடுத்து மாற்றுப்போட்டுக் கொள்ளலாம், எ - று. (2)

---

## வெள்ளிமுறை

வேதையிது களங்கமா யுருகாநின்றால்
வேதைக்குத் தடவிவிடு சாவாதுதன்னை
பாதையிலே திருகிவிடும் பார்காணுமல்
பண்புபெறச் செய்விப்பாய் பாசோர்க்கெல்லாம்

காதைபிதா மின்னமொரு போக்குகேளு
கடியசெருப் படிச்சாறு சின்னிச்சாறு
தாதையிலே காரைவிலைச் சாறுழக்கு
சாறுவகைக்காகு மிலுப்பை நெய்கால்.

(போ - ரை.) முன்சொன்ன உப்புக்களங்கானது நன்றாய் உருகாவிட்டால் வேதைக்குக் குருமருந்தில் கொஞ்சம் எடுத்துத் தடவி விட்டால் நன்றாய் உருகி மாற்றுக்காட்டும் இது நிற்க (வேறு வெள்ளி செய்யும்படியான வகையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக, எப்படி யென்றால்) சிறு செருப்படி என்னும் இலைச் சாறு உழக்கும் இலுப்பை நெய் கால் வீசையுமாகத் தயார் செய்து வைத்துக்கொண்டு, எ - று. (3)

நெய்தனிலே வெள்ளியம் பலமொன்றாக
நீயுருக்கி யயக்கரண்டி தன்னிலேதான்
மெய்தனிலே முன்சாறு மூன்றுமொன்றாய்
விட்டதிலே யுருக்கிச்சா யிருபத்தொன்று
பெய்தனிலே பின்னுமம் முறையேநெய்யிற்
பிசகாமல் முன்னிருபத் தொன்றுமுறையே
கைதள்ளிச் சாய்க்கையிலே சுத்தியாச்சு
கனகார மிட்டுருக்க வெள்ளிதானே.

(போ - ரை.) முன்சொன்ன சாறுகளையெல்லாம் ஒன்றாய்க் கலந்து அந்தச்சாற்றில் ஒரு பலம் வெள்ளீயத்தை இரும்புக் கறண்டியிலிட்டு உருக்கி உருக்கி இருபத்தொரு தரம் சாய்த்து பிறகு இலுப்பை நெய்யிலும் அந்தமாதிரியாகவே இருபத்தொரு தரம் உருக்கி யுருக்கிச் சாய்த்தால் அந்த வெள்ளீயமானது சுத்தி யாகும் பின்பு அப்படி சுத்தியாய் முடிந்திருக்கும் வெள்ளீயத்தில் வெங்காரத்தைக் கொடுத்து உருக்கினால் அந்த ஈயமானது வெள்ளியாகும், எ - று.

ஆனல், ஈயத்தில் வெங்காரத்தைக் கொடுப்பதற்கு அளவு வாதகுரு முகாந்தரத்தில் தெரிந்துகொள்ளவேண்டியது. (4)

---

## அயக்களங்கு

வெள்ளியைவிட் டிரும்புருகல் வராகனென்று
விதமிருந்த தங்கமது வராகனென்று
துள்ளியைவிட் டிரும்புருகு முகத்தில்தங்கம்
சூட்டிடவே யுருகுமதின் பின்புகேளு
தள்ளிவிட்டுக் கட்டியதோர் சாதிலிங்கம்
தாக்கிப்பார் கொடுத்திடவே களங்கமாகும்
நள்ளிவிட்டுக் களங்கதனை வெள்ளீயத்தில்
நாட்டிடவே பத்தரையுங் காணும்பாரே.

(போ - ரை.) (முன்சொன்ன வேதை நிற்க வேறுகளங்க மூலமாகச் சொல்லுகின்ற வேதையைக் கேட்பாயாக எப்படியென்றால்) இரும்புச்சிட்டம் ஒரு வராகனெடையும், தங்கம் ஒரு வராகனெடையும் தயார்செய்து வைத்துக்கொண்டு, பின்பு அந்த இரும்புச் சிட்டத்தை மூசையிலிட்டு உருக்கி, அது உருகிக் கண்விட்டாடும்போது மேற்படி தங்கத்தைக்கூட்ட இதுவு முருக்கிக்கலந்திருக்கும், அப்படிக்கலந்து களங்கமான மருந்தையெடுத்து வைத்துக்கொண்டு (வேறு சாஸ்திரங்களின் மூலமாக நன்றாகக் கட்டப்பட்டுள்ள சாதிலிங்கத்தில் முன் உருக்கியெடுத்த களங்கத்தில் கொஞ்சம் கொடுத்துருக்க அந்த லிங்கம் களங்கமாகும்) அப்படி களங்கமான லிங்கத்தை வெள்ளீயத்தில் கொடுத்து ஊதிப்பார்த்தால் பத்தரைமாற்றுன பொன்னுய் நிற்கும். (இதையெடுத்துச் சோதித்துப்பார்த்துக் கொள்ளலாம்), எ - று.

ஆனல் ஒரு மருந்தில் ஒரு மருந்தைக்கொடுத்து உருக்குவதற்கும், ஊதுவதற்கும் சேர்க்கவேண்டிய அளவை குருமுகாந்தரத்திலாஞலும், நூல் முகாந்தரத்திலாஞலும், அநுபவ முகாந்தரத்திலாஞலும் தெரிந்துகொள்ளவேண்டியதாம் என்று முன்னோர்கள் சொல்லக் கர்ணபரம்பரையாகக் கேட்டிருக்கின்றபடி நடந்துகொள்ள வேண்டியது. (5)

———

## வெடியுப்புக்கட்டு

காணுமடா வங்கங்குர்தி யூதிப்போடு
கடைசியிலே யின்னமொரு வகையைக்கேளு
பூணுமடா வெடியுப்புக் கழஞ்சதொன்று
புகழான நவாச்சாரம் கழஞ்சதொன்று
ஆணுமடா விரண்டையுங்கா ணரைத்துப்பில்லை
யருஞ்சிறிய குகையினில்வைத் தோடுமூடி
நாணுமடா சீலைசெய்து புடமிட்டப்பா
நவாச்சாரம் வெடியுப்புங் கட்டிப்போச்சே.

(போ - ரை.) முன்பத்தரைமாற்றுன பொன்னில் வங்கத்தை யிட்டுருக்கினல் சுத்தமாய்விடும். அது நிற்க (வேறு வெடியுப்புக் கட்டினைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக எப்படி யென்றல்) ஐஞ்சாங்காய்ச்சல் வெடியுப்பு ஒன்றேகால் வராகனெடையும், நவாச்சாரம் ஒன்றேகால் வராகனெடையும், எடுத்து இரண்டையும் ஒன்றுகச் சேர்த்து நன்றுயரைத்துப் பில்லைதட்டி மூசையில் வைத்து மேலே ஓடுமூடி மண்சீலை எழுசெய்து உலர்த்தி ஒரு அளவாக வருட்டியடுக்கிப் புடம்போட்டால் இரண்டும் ஒன்றுகச் சேர்ந்து கட்டிப்போகும், எ - று. (6)

கட்டியதைக் குழிக்கல்லி லிட்டுக்கொண்டு
கனமான கர்ப்பூரம் கழஞ்சு மரையாக
இட்டிடக் கழஞ்சுபச்சை நவாச்சார
மியலான கொழுப்புசற்றே கூடவிட்டுக்
கட்டியைத்தான் கரண்டிதனி லிட்டுக்கொண்டு
கனலிலிடு தீவெதுப்பிக் கழஞ்சுசெம்பு
விட்டிடு மஞ்சாடிவிட்டுச் செம்புமூன்று
வெள்ளி யேழிருக்க மாற்றுறுதானே.

(போ - ரை.) முன்னே கட்டிபோன வெடியுப்புக்கட்டை வேறே வைத்துக்கொண்டு அதற்காக இரசகர்ப்பூரம் ½-⅓, வராக

னெடையும், நவாச்சாரம் $\frac{1}{2}$-$\frac{1}{8}$; வராகனெடையும் கொஞ்சம் பூநீறு காய்ச்சும்போது உண்டாகும் கொழுப்பும், ஆக மூன்றையும் ஒன்றுகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைத்துக் காம்புநீண்ட கறண்டியில் வழித்துப்போட்டு அடுப்பிலிட்டு உருக்கி உருகும்போது $1\frac{1}{4}$-வராகனெடை சுத்திபண்ண செம்பும், முன் கட்டின வெடியுப்பு, ஒரு மஞ்சாடியும் இட்டு நன்றுயுருக்கி வேறே வைத்துக்கொண்டு சுத்திபண்ண செம்பு மூன்றெடையும், வெள்ளி ஏழெடையும் சேர்த்து உருக்கி உருகும் பக்குவத்தில் முன் கரண்டியில் பாகப்படுத்தினமருந்து ஒரு எடைகொடுத்து உருக்கி எடுத்துக்கொள்ள ஆறுமாற்றைக் கொடுக்கும்படியான வேதையாகும், எ - று. (7)

---

## வங்கக்கட்டு

தானான வியமொன்று நாகமுக்கால்
   தாய்முக்கால் தாரமுக்கால் துருசுமுக்கால்
ஏனான சம்பளத்தின் சாற்றரைத்து
   ஈயத்தைப் பொதிந்துகொண்டு சீலைசெய்து
மானான கோழிபுட மிட்டெடுத்து
   மஞ்சாடி யிதுவெள்ளி நாலுமாக
நானாக வுருக்குமாற் றுறுமாச்சு
   நலமான கிறம்போனல் சாரமிட்டிருக்கே.

(பொ - ரை) வங்கக்கட்டினுல் செய்யப்படும் வேதை வருமாறு: எப்படி என்றால், சுத்திசெய்த ஈயம் ஒருபலம் எடுத்துக்கொண்டு; சுத்திசெய்த சிறுகண் துத்தநாகம் முக்காற்பலம், வட்டப்பொன் முக்காற்பலமும், அரிதாரம் முக்காற்பலமும், மயில் துத்தம் முக்காற்பலமும் நிறுத்தெடுத்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றால் நன்றுயரைத்து, இப்படி அரைக்கப்பட்ட அந்த மருந்தினுள் முன்சொன்ன ஈயத்தைக் கட்டியாகவே வைத்து மேலே மருந்துமூடி ஏழுசீலைமண்செய்து (10) வறட்டியில் புடம் போட்டு எடுத்துப் பார்க்க முன் வங்கம் கட்டிப்போயிருக்கும். அப்படியிருக்கும் மருந்தில் ஒரு மஞ்சாடியும், வெள்ளி

நாலு மஞ்சாடியும் சேர்த்திருக்கிப்பார்த்தால் ஆறுமாற்றுப் பொன்னாகும். ஆனால் ஒருவேளை நிறங்கறுக்கும், அப்படி கறுக்காத முன்னமே மறுபடியும் வெங்காரம் கொடுத்து அதை யுருக்கினால் கறுக்காது எ - று.

இங்கே வங்கம் என்றது எந்த வங்கத்தையானாலும் எடுத்துக் கொள்ளலாம். (8)

---

## ரசக்கட்டு நாகக்கட்டு

உருக்கமுன் வங்கம்போற் கட்டுஞ்சூத
மொருகழஞ்சு மரிதாரங் கழஞ்சதொன்று
மிருக்கவே லிங்கமது கழஞ்சதொன்று
மிவைரண்டுஞ் செம்பருத்தம் பூச்சாற்றுட்டி
மருக்கவே குகைபிடித்துக் கட்டுஞ்சூதம்
வைத்துமுன் பூச்சாறு மூன்றுதுளிவிட்டு
குருக்கவே மேல்மூடி மண்குகைக்குள் வைத்து
குருவிட்டோ டிட்டிரண்டு சீலைசெய்யே.

(போ - ரை.) இது ரசக்கட்டினாலும், நாகக்கட்டினாலும் நடத்தும் வேலைகளைச் சொல்லுகின்றது. அவை வருமாறு எப்படியென்றால் முன்னர் வங்கத்தைக் கட்டியதுபோலவே இந்த இரண்டையும் கட்டி வைத்துக்கொண்டு பிறகு, அரிதாரம் 1¼-வராகனெடையும், லிங்கம் 1¼-வராகனெடையும் நிறுத்து இந்த இரண்டையும் செம்பருத்திப் பூச்சாறுவிட்டு அரைத்து மூசைசெய்து, முன்னே கட்டிவைத்திருக்கும் இரசத்தில் 1¼-வராகனெடை எடுத்து இந்த மூசைக்குள்வைத்து முன் செம்பருத்திப் பூச்சாறு மூன்று துளிவிட்டு மேலே ஓடுமூடிச் சீலைசெய்து வேறு ஒரு மண் மூசைக்குள்வைத்து மேல்மூடி 21-சீலைமண்செய், எ - று. (9)

சீலைசெய்து சிறுபுட மிட்டெடுத்துப்பாரு
செந்தூரம் வெள்ளிதனி லொருமாவிய

ஏலமென்ன மாற்றஃதே ழரையாக்காணு
மினியென்ன காட்டிநக முருகும்போது
மாலென்ன மேனிரசம் சுறுக்குத்தாக்கு
மைந்தனே செந்தூர மாகும்பாரு
பாலென்ன கழஞ்சுவெள்ளி யுருகும்போது
பார்த்தெடுத்து மஞ்சாடி செந்தூரமீயே.

(போ - ரை.) முன்போலவே சீலமண்செய்து லகுபுடம் போட்டெடுத்துப் பார்த்தால் இந்த இரசமானது செந்தூரமாயிருக்கும். அந்தச் செந்தூரத்தில் ஒரு மாவெடை யெடுத்து நாலு மாவெடை வெள்ளியை யுருக்கிக்கொடுத்தால் ஏழரைமாற்றுப் பொன்னுன வேதையாகும். (இதுவேறு) முன்பாட்டில் சொல்லியிருக்கிற நாகக்கட்டை மூசையிலிட்டு ஊதினுல் இருகும். அப்படி அது யுருகிக் கண்விட் டாடுஞ்சமயத்தில் குப்பைமேனிச்சாறு சுறுக்குக் கொடுத்தால் அந்தநாகம் செந்தூரமாகும். அந்தச் செந்தூரத்தில் ஒருமஞ்சாடி எடையெடுத்து $1\frac{1}{4}$-வராகனெடை வெள்ளியை யுருக்கி அதில் கொடுக்கவேண்டும், எ - று. (10)

---

## துருசு சுண்ணம்

ஈயவே பத்தரை மாகும்பாரு
பின்னமொரு துருசினெடை கழஞ்சுக்கேதான்
மாயவே பச்சை கர்ப்பூரம் ரண்டு
மஞ்சாடி வீரம் கழஞ்சு ரண்டுக்கு
ஈயவே சங்குசுட்ட துடனே கேளா
யெலு மிச்சம் சாற்றிலிட்டுடனே கேளாய்
ஆயிந்தமருந் திரண்டும் பொடித்துச் சுண்ணும்
புத்தண்ணீ ரித்ததிலே துருசுவையே.

(போ - ரை.) அப்படி கொடுக்கவே பத்தரை மாற்றுயுள்ள பசம்பொன்னுவதான வேதையாகும். இதைவிட்டு துருசு வேதையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக, எப்படியென்றால் மயில்

துத்தம் 1¼-வராகனெடைக்கு இரசகர்ப்பூரம் இரண்டு மஞ்சாடியும் வீரம் 1¼-வராகனெடையும் எடுத்து இந்த இரண்டையும் எலுமிச் சம்பழச்சாற்றில் ஊறவைத்தெடுத்துப் பின்பு இந்த இரண்டையும் பொடிபண்ணி ஒரு சட்டியிற்போட்டு அதின்மேற் கற்சுண்ணாம்பு கொட்டித் தாளித்து இறுத்த சலத்தில் முன்சொன்ன மயில்துத் தத்தை ஊறவைக்க வேண்டும். (11)

## வெங்காரக்கட்டு

வைத்துப் பின்னைந்துநாள் காயவைத்து
வைக்கவே நீலகண்டர் வெள்ளையானர்
வெற்றியடா விந்தநீரு வேதைபாரு
வெகுசுருக்கு வேதைகளிற் கொடுத்துப்பாரு
உற்றதொரு பொரிகாரக் கட்டைக்கேளு
யொருகழஞ்சு பொரிகார நெல்லிக்கந்தம்
அற்றதொரு முக்கழஞ்சு தனிவிட்டேய
யக்கரண்டி தனிவிட்டுக் காரக்கட்டே.

(போ - ரை.) மேற்படியாக ஊறவைத்துப் பின் ஐந்துநாள் வரைக்கும் வெய்யிலில் வைத்துக்கொண்டு வந்தால் அந்த மயில் துத்தமானது வெள்ளையாய் வெளுத்துப் போகும். அப்படி வெளுத்த இந்தச் சுண்ணமானது ரொம்பவும் காரமுடையது. ஆகையால், இதை வேதையின் மார்க்கப்படி (செம்பு நாலுபங்கு வெள்ளி யொருபங்கு இந்த மருந்து ஒருபங்காகக் கொடுத்து உருக் கினல் பழுப்பாகும்) இது நிற்க இனி வெங்காரக் கட்டியினுலா கின்ற வேதையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. எப்படியென் ருல், வெங்காரம் ஒன்றேகால் வராகனெடையும், நெல்லிக்காய்க் கந்தகம் மூன்றேமுக்கால் வராகனெடையும் ஒன்ருய்க் கூட்டி இரும்புக்கரண்டியில் போட்டு உருக்கி வெங்காரத்தைக் கட்ட வேண்டியது, எ - று. (12)

காரத்தின் கட்டிதனைப் புரட்டிமுந்நாள்
காயவைத்துப் பிறகெடுத்துப் பொறுக்கைத்தள்ளி

வாரத்தின் முன்னரிட்டுக் கொதிக்கும்போது
மறுபடி காரம்புரட்டி ரவியினில்வைத்
திரமது விரண்டுநாள் காய்ந்தபின்ன
ரிறுகவதைக் கட்டிவிடு மதையெடுத்துச்
சூரத்து வெள்ளியுநால் காரமொன்று
சூட்டிடவே சோதியது தங்கமாமே.

(பொ - ரை.) முன்சொன்ன கந்தகமானது உருகும்போது அதில் வெங்காரத்தைப் புரட்டிப் புரட்டிக் கந்தகம் ஆய்விட்ட பின்பு மூன்றுநாள் வரைக்கும் அந்தப் புரட்டின வெங்காரத்தைக் காயவைத்துப் பிறகு எடுத்துப்பார்த்தால் மேலெல்லாம் பொறுக் குப் பொறுக்காயிருக்கும். அந்தப் பொருக்குகளை யெல்லாம் தள்ளிப்போட்டு மறுபடியு முன்போலவே கந்தகத்தையுருக்கி அது கொதிக்கும்போது முன் புரட்டின வெங்காரத்தை மறுபடியும் அதில் புரட்டி இரண்டுநாள் வெய்யிலில் உலர்த்திக் காய்ந்தபின்பு பார்த்தால் இந்தக் கந்தகமானது வெங்காரத்தை இறுக்கி கட்டி யாக்கிக் காண்பிக்கும். அந்தக் கட்டியை யெடுத்து நாலுபங்கு வெள்ளியை யுருக்கி இதில் இந்தக்கட்டு ஒரு பங்கு கொடுத்தால் இரண்டும் கலந்து தங்கமாகும் வேதையாகும், எ - று. (13)

நந்தீஸ்வரர் வாதம்

முற்றிற்று.

---

## வே று

# கந்தகத் தைலம்

காணப்பா கந்தகத்தின் தயிலஞ்சொல்வேன்
கைமுறையாய்க் கந்தகமும் பலமும்பத்து
பூணப்பா கல்வத்தில் போட்டுக்கொண்டு
புகழான வெள்ளைத் தாமரைப்பூச் சாற்ருல்
தோணப்பா விருபதுநாள் நன்ருயாட்டித்
துகளான வழிஞ்சில்விதை பலமும்போடு
ஊணப்பர் மூன்றுநா ளரைத்துவாங்கி
யுத்தமனே நன்ருக வுலர்த்திடாயே.

(போ - ரை.) கந்தகத்தயிலத்தால் செய்யப்படும் வேதையாவது: எப்படியென்ருல், சுத்திசெய்த நெல்லிக்காய்க் கந்தகம் பத்து பலத்தைக் கல்வத்தில் போட்டு வெள்ளைத் தாமரைப்பூக் கொண்டு வந்து இடித்துச் சாறெடுத்து இருபதுநாள் வரைக்கும் (நாளொன்றுக்கு நாலுநாழிகை விகிதமாக) நன்ருயரைத்துப் பின்னர் இருபத் தோராவதுநாள் காலையில் ஒருபலம் இறங்கழிஞ்சில் விதையை முன்னரைத்துள்ள கந்தகத்துடன் சேர்த்து மூன்றுநாள் வரைக்கும் முன்மாதிரியே யரைத்து வெய்யிலில் வைத்து உலர்த்திவிடவேண்டும், எ - று. (1)

உலர்த்தியல்லோ குப்பையிலே போட்டுநீயு
முத்தமனே குப்பிக்குச் சீலைசெய்து
கலர்த்தியல்லோ குப்பியின்வாய்க் கப்பிவைத்து
கட்டியதோர் சட்டியிலே நடுவேவைத்து
மலத்தியல்லோ வையாமற் கவிழ்த்துக்குப்பி
வைத்தல்லோ கட்டியதின் தமருக்குள்ளே
தளர்த்தியல்லோ சீலைசெய்து சந்துக்கெல்லாம்
சார்வாகக் குப்பியின்மேல் மணலைப்போடே.

(போ - ரை) இப்படிச்செய்து உலர்த்தின மருந்தைக் காசிக் குப்பியில் போட்டு அந்தக் குப்பிக்குச் சீலைமண்செய்து அந்தக் குப்பியின் வாயில் சிறுகம்பி ஒன்றுவைத்து ஒரு குடைவு சட்டி மேற்படி குப்பியின் வாய் பிடிக்கும்படி துவாரஞ்செய்து அந்தக் குப்பியை அந்தவாய்க்குச் சரிப்படுத்தி நன்றாகச் சீலைமண்செய்து அந்தச் சட்டியிலுள்ள குப்பி நன்றாய் மறையும்படி அந்தச்சட்டி நிறைய வெள்ளை மணலைப்போட்டு நிறைத்து வைத்துக்கொள்ள வும், எ - று. (2)

போட்டல்லோ மணல்மேலே புடத்தைப்போடு
புகழான சட்டியைத்தான் மூக்கவரில்வைத்து
நீட்டியல்லோ குப்பிதனின் மூக்கிற்குள்ளே
நேராகப் பீங்கானை வைப்பாயப்பா
மூட்டியல்லோ தயிலமெல்லாம் பீங்கானில்வீழும்
முறையாக வீழுமட்டும் புடத்தைப் போடு
ஆட்டையிலே தயிலத்தில் சவர்க்காரம்போட்
டப்பினுல் துருசின்மேல் வெள்ளை யாமே.

(போ - ரை.) மணலால் அந்தச் சட்டியை நன்றாக நிறையப் பண்ணிக் கீழே மூன்று பெரியகல்லை அடுப்புப்போல் வைத்து அந்த அடுப்பிற் குள்ளாக ஒரு பீங்கான் வைத்து அந்த அடுப் பின்மேல் மேற்படி சட்டியை வைத்து அந்தச் சட்டியிலிருக்கும் குப்பியினுடைய வாயிலிருக்கும் கம்பியானது அந்தப் பீங்கானில் படும்படி வைத்து மேலே வறூட்டி யடுக்கிப் புடம்போடவேண் டியது. அப்போது அந்தக் குப்பியிலிருந்து தயிலம் பீங்கானில் விழும், அப்படி தயிலம் விழாமற்போனுல் தயிலம் இறங்குமட்டும் புடத்தைப் போடவேண்டியது. பின்னுல் அந்தத் தயிலத்தில் சவர்க்காரம் கூடப்போட்டரைத்துத் துருசின்மேல் போடப் பின்னுல் அந்தத் துருசானது வெள்ளையாய்ப்போகும், எ - று. (3)

வெள்ளையென்ற துருசியதைச் சூதத்தில்மூட்டு
விரவியே குப்பியதில் தயிலம்வைக்க

சள்ளையென்ற சூதமது கட்டிப்போகும்
சரக்கெல்லா மிப்படியே கட்டுங்கட்டும்
கொள்ளையென்ற வொவ்வொன்றில் கோடிவேதை
கட்டலாஞ் செந்தூரங் களங்கங்கோடி
அள்ளையென்ற தங்கமிட்டுச் சூதங்கட்ட
வறுபத்து நால்முகமு மாடுந்தானே.

(போ - ரை.) அப்படி வெள்ளையான துருசிச் சுன்னத்தை ரசத்திலிட்டு முன் தயிலம் குத்தினுல் அந்த இரசம் கட்டிப்போகும். இப்படியே மற்ற சரக்குகளெல்லாமும் கட்டிப்போகும் அப்படி சரக்குகளெல்லாம் கட்டிப்போனுல் ஒவ்வொன்றில் அநேக வகையான வாதங்கள் செய்யலாம். ஆனுலும் தங்கத்தையும், இரசத்தையும் கூட்டி வேதிக்க அறுபத்துநான்கு சரக்குகளையும் வேதிக்கக் கூடும், எ - று. (4)

தானென்ற செப்புதனை நருக்கிக்கொண்டு
சாதகமாய்க் குகையிலிட் டுருகும்போது
கானென்ற தயிலமது மூன்றுதுளிகுத்த
கடுங்களிம்பு கட்டிராவி செவப்புமெத்த
ஊனென்ற செம்பினிட ஆறதும்போச்
சுத்தமனே செம்பொனனே யாச்சுதாச்சு
தேனென்ற செம்பிரண்டு தங்கமொன்று
தெளிவான வெள்ளியதி லேழுங்கூட்டே.

(போ - ரை.) சுத்திசெய்யாத செம்பை நருக்கிக்கொண்டு மூசையில் வைத்து உருக்க அது உருகும்போது மேற்படி தயிலத்தில் மூன்று துளி குத்தினுல் அந்தக் களிம்பு அற்றுப்போய் பொன்போலாகும். அப்படி சுத்திபண்ணின செம்பு இரண்டு பங்கும், தங்கம் ஒரு பங்கும், வெள்ளி எழு பங்கும் கூட்டவேண்டியது, எ - று. (5)

கூட்டியல்லோ வுருக்கிடவே யொன்றுமாகும்
குறையாம லெட்டரையே காணும்காணும்

நீட்டியல்லோ தினந்தோறும் தயிலந்தானும்
நினைவாக மண்டலமே கொண்டாயானால்
ஆட்டியல்லோ நோய்களெல்லா மகன்றுபோகு
மப்பனே விந்துமெத்த வமிர்தமாகும்
பூட்டியல்லோ விதினோடே செயரசமுங்கொண்டாற்
பொன்போலே காயமது சித்தியாமே.

(போ - ரை.) இப்படியெல்லாம் கூட்டியுருக்கினால் ஒன்றும்ச் சேர்ந்து எட்டரை மாற்றான பொன்னாகும். இப்படி இந்தத் தயிலத்தினால் வேதை செய்வதைவிட்டு ஒரு மண்டலம் வரைக்கும் தினமும் ஒரு துளியாகச் சாப்பிட்டுக் கொண்டு வருவாயானால் தேகத்திலுள்ள நோய்களெல்லாம் ஒழிந்து விந்து விருத்தியடைந்து தேகம் பலமடையும். இந்தத் தயிலத்தோடு ஜெயரசமும் சேர்த்துச் சாப்பிட்டால் தேகம் சித்தியடையும், எ - று. (6)

---

## வெடியுப்புச் செயநீர்

தானனவெடியுப்புச் செயநீர்கேளு
சாதகமாய்ப் பலம்பத்து நிறுத்துக்கொண்டு
வேனை சோடசமாங் குருபூநீறு
விளங்கியகா சைந்தாகுங் கல்லுப்பைந்து
கோனை நவாச்சார மன்னபேதி
கொடியதோ ரப்பிரகந் துருசுசீனம்
பானை சூடன்வெள்ளை வெங்காரம்பூரம்
வரிசையுட னிந்துப்புக் கடல்நுரையுங்கூட்டே.

(போ - ரை.) வெடியுப்புச் செயநீராமாறு கூறுகின்றது: எப்படி யென்றால், ஐஞ்சாங்காய்ச்சல் வெடியுப்பு பத்து பலமும், பதினாறுமுறை சுத்திசெய்து முடித்து எண்ணெயெடுத்துவிட்ட பூநீறு ஐந்துகாசெடையும், கல்லுப்பு ஐந்துகாசெடையும், நவாச்சாரம், அன்னபேதி, அப்பிரகம், மயில்துத்தம், சீனாகாரம், ஆலாத்தி கர்ப்பூரம், வெள்ளைப்பாஷாணம், வெங்காரம், இரசகர்ப்

பூரம், இந்துப்பு, கடல்நுரை ஆகிய இவைகளும் ஐந்தைந்
காசெடையுமாக நிறுத்துச் சேர்த்து, எ - று. (7

கூட்டுவது வீரமுடன் காசைந்துசேரு
குறிப்புடனே தொகையற்ற பூரணமும்பாரு
ஆட்டுவது புளியெட்டுக் கொருக்காயெட்டு
மழகான வீரனென்ற சடையுமெட்டு
பூட்டுவது பழச்சாற்றிற் கரைத்துக்கொண்டு
புகழாக முறையுடனே யேழுநாளாட்டித்
தீட்டுவது பில்லைதட்டிக் கலயத்துள்ளே
சிறப்பாகக் கற்சுண்ணம் பூசியாற்றே.

(போ - ரை.) வீரம் ஐந்து காசெடையும், பூநீற்றைக் காய்ச்சும்போது உண்டாகும் ஒருவகையான புளியுப்பு எட்டுக்காசெடையும், அதிலிருந்து உண்டாகும் கொருக்காய் எட்டுக்காசெடையும், ஈரல் சடையென்று சொல்லுகின்ற பூநீற்றுக் குழம்பு எட்டுக்காசெடையும் ஆகக்கொண்டு இவைகளை பழச்சாறு என்று சொல்லுகின்ற பூநீற்றுச்சலத்தினால் கரைத்து ஏழுநாள் வரைக்கும் ஒரு நாளைக்கு நான்கு நாழிகைவீதம் நன்றாய்ப் பலங்கொண்டு அரைத்துப் பில்லை செய்துலர்த்தி இரண்டு அகல்களில் உள்ளே தாளித்த கல்சுண்ணம்பைப் பூசி நிழலிலுலர்த்தி, எ - று. (8)

ஆறினபின் பில்லைவைத்துச் சீலைசெய்தே
யடைவாக நூறெருவிற் புடத்தைப்போடு
தேறினபின் ஞலிஒன்று சாரங்கூட்டிச்
சிறப்பாக வாட்டியதை வழித்துப்பின்கான்
கூறினபின் னீராச்சு வீரம்பூரம்
கூடவிட்டுச் சரக்குகளிற் றடவிவாட்டி
மாறினபின் செயநீரைச் சுருக்குத்தாக்க
மாண்டுபோம் நவலோக பொன்னும்பாரே.

(போ - ரை.) அதற்குள் ஷை பில்லையை வைத்து மேலே அகல்மூடி ஏழு சீலைமண்செய்து உலர்த்தி நல்ல வருட்டி ஞறடுக்கி மத்தியில் அகலை வைத்துப் புடம்போட்டு நன்ருய்க் குளிர்ந்தபின் அதையெடுத்து நிறுத்து அது இருக்கும் எடைக்கு நாவிலொரு பங்கு நவாச்சாரம் கூடச்சேர்த்து நன்ருயரைத்து வழித்து ஒரு பீங்கானில் வைத்துப் பார்த்தால் வெடியுப்புச் செயநீராயிருக்கும். வீரமும், பூரமும் ஒரு அளவாக நிறுத்தெடுத்து ஷை செயநீரா லரைத்து ஆடுஞ்சரக்கு அறுபத்து நாலுக்கும் தடவி நெருப்பில் வாட்டி அந்தச் செயநீரைச் சுருக்குக் கொடுத்தால் அந்த லோகங் கள் பொன்னுய்விடும், எ - று. (9)

முற்றிற்று.

---

ஸ்ரீ கயிலாச பரம்பரை

# சட்டைமுனியார்

திருவாய் மலர்ந்தருளியவை

## வாதங்கள்

### உப்பின் பேர்கள்

சாரியிதென்றுந் தனித்தகல் லுப்பென்றும்
வாரியினுப்புடன் மாமதி சூடனும்
சேரவே நாலாய்ச் சேரவையென்று
மாரிப்பிறப்புக்கு வழலையினுப்பே.

(போ - ரை.) வாதமார்க்கங்களுக்குப் பிரதானமான பூநீற்றுப்புக்குப் பலபேர்கள் உண்டு. அப்பேர்களின் விவரங்களை இங்கே சொல்லுகின்றது, எப்படியென்றால், அந்த உப்பானது சாரமென்றும், கல்லுப்பென்றும், கடலுப்பென்றும், இந்துப்பென்றும், சூடனென்றும், மழையினாற் பிறத்தலாம் வழலையுப்பென்றும் பெயரிடப்பட்டு வருகின்றது, எ - று. (1)

வழலையினுப்பென்று மானிலவுப்பென்றும்
வழலைக்குச்சார மசமதியுப்பென்றும்
கிழலைக்கடந்து நேரேகரந்திட்டேன்
களவில்லைசொன்னேன் கைகண்டவாதமே.

(போ - ரை.) நிலத்துப்பென்றும், நவாச்சார மதியுப்பென்றும், பலவகையான பேரிட்டும் பெரியோர்கள் வழங்கிக்கொண்டு வருவதை நான் மற்றையசித்தர்கள் ஒளித்திருப்பதைப்போல் ஒளிக்காமல் வெளிப்படையாகச் சொல்லிவிட்டேன். ஆகையால் என்னால் சொல்லப்படும் வாதமானது அனுபவத்திற்கு வந்ததேயொழிய வேறில்லை, எ - று, (2)

வாதம்பிறக்கும் பாறையினுப்பாலே
நாதம்பிறக்கு நல்லகல்லுப்பாலே
போதம்பிறக்கும் பூரணன்றன்னாலே
வேதம்பிறக்கும் வெடியுப்புச்சூதமே.

(போ - ரை.) இரசவாதமானது பாறையிலிருந்து வெட்டி யெடுக்கப்படும் பாறைவுப்பால் உண்டாகும். நாதமானது மலை களிலிருந்து வெட்டியெடுக்கப்படும் கல்லுப்பால் உண்டாகும். ஞானமானது எங்கும் நிறைந்தவனான சிவபெருமானால் உண்டா கும். வெடியுப்பின்வேதையும், சூதவேதையும் வேதங்களில் சொல் லப்பட்டிருக்கின்றன, எ - று. (3)

சூதச்சிப்பியின் சுண்ணஞ்சேர்த்திட
சீதகுணங்கள் சீனஞ்சேர்த்திடில்
வேதம்விளங்கும் வேந்தனுமாயிடும்
தோதமார்க்கந் துறவியறிவோர்க்கே.

(போ - ரை.) சூதச்சுண்ணத்தையும். சிப்பிச் சுண்ணத்தை யும் சீனகாரத்தைக் கட்டிசெய்த சுண்ணத்தையும் ஒன்றாகக்கூட் டினால் வேதையின் துறையையறிபவர்களுக்கு வேதை கைவல்ய மாகும் எப்படியென்றால், வேதமானது ஞானிகளுக்கு விளங்கி அதில் ஞானமுதிர்ச்சியினால் அரசனாகவு மாகக்கூடும், எ - று. (4)

அறிவான சபையென்றும் பஞ்சபூத
மாகியே மிகச்செய்யும் புரியஷ்டகத்தால்
குறியான பூரணமாம் விந்துநாதம்
கொள்கையாய் மேருவில் பேருண்டாகிப்
பிரியாம லொன்றாகிச் சடலமாகிப்
பெருமையுற்றுச் சவர்க்காரப் பிறவிக்கப்பால்
வறியாத பேறுக்குவாதமேது
மகத்தான வழிலேசெய்யும் வகையைக்கேளே.

(போ - ரை.) ஞானமாகிய சபையென்றும் பஞ்சபூத சபை யென்றும் புரியஷ்டகத்தின் மார்க்கத்தால் விளங்கும் பூரணமாகிய

விந்து, நாதங்களுடைய தன்மையை யுடையதாய் மேருவென்னு ஒரு அரிய இடத்தில் பேர்பெற்றதாகி எக்காலத்தும் ஒன்றைவிட டொன்று பிரியாமலிருக்கின்றமையால் பெருமையை யடைந்தி நின்ற உயர்ந்த சவர்க்காரமென்றும் சொல்லப்படுகின்ற ஜெகம துக்கப்பால் விளங்கும் பெரியோர்களுக்கு வாதம் என்னப்பிரயோ ஜன முண்டாக்கும் ஒன்றுமில்லை. ஆகையால் மற்றையோர்க்கே வாதம் பிரயோஜன முண்டுபண்ணும் என்றபடி. ஆனாலு முன்னே சொன்ன வழலையுப்புச் செய்யும் மார்க்கத்தை இனி சொல்லுகின்றேன். அதை நன்றாய் கேட்பாயாக, எ - று. (5

கேளாயமுரி கெடியாய்ப் பதினாறு
வாளா யெவாச்சாரம் வளமாய்ப்பதினெட்டு
கோளாங்கற்சுண்ணம் கொட்டும்படிரண்டு
நாளாங்ககல்லுப்பு நாட்டும்படியொன்றே.

(பொ - ரை.) மாணக்கனாகிய அறிவுடையவனே நீ கேட்பா யாக. சத்தகங்கையென்று பெரியோர்களால் சொல்லப்பட்டு வருகின்ற, அமுரிச்சலம் பதினாறுபடி யளந்து ஒரு பாண்டத்தில் விட்டு, அதில் எவாச்சாரம் பதினெட்டுபடியும், கற்சுண்ணாம் இரண்டுபடியும் கல்லுப்பு ஒருபடியும், எ - று. (6

ஒன்றாய்த்தெளியவைத் துறவாகக்காய்ச்சி
நன்றாய்க்குழம்பும் பருவத்தினிறைகேளு
சென்றேயடிமுடிக் குள்ளேயிணங்கனைக்
கொன்றேயெடுத்துக் குலைழப்பிடுமெண்ணெய்க்கே.

(பொ - ரை.) மேலே சொன்ன உப்புக்களையெல்லாம் அந்த முரியில்போட்டு நன்றாய்க் கரைத்துவைத்துத் தெளிந்த பின் அந் தத் தெளிவை யிறுத்துவிட்டுக் காய்ச்சிவரும் பருவத்தில் மேலே நுரைத்து வருகின்ற எண்ணெயை நீக்கி உள்ளேயிருக்கும் உப்பை வேறேயெடுத்துக் கொள்ளவேண்டும், எ - று. (7)

எண்ணெயரைப்படி யிணங்கனரைப்படி
ஒன்றாகக்கரைத் துறவிடுமெண்ணெய்க்கு

புண்ணியவீரமும் பூரமும்வெள்ளையும்
தண்ணியசீனமும் தான்வகைக்கொன்றே.

(போ - ரை.) அப்படி யெடுத்த அரைப்படி எண்ணெயில் அரைப்படி உப்பைச்சேர்த்து அதில் வீரம் ஒருகாசெடையும் பூரம் ஒருகாசெடையும் வெள்ளைப்பாஷாணம் ஒருகாசெடையும், சீனகாரம் ஒருகாசெடையுமாக, நிறுத்து எடுத்துக்கொள்ளவேண்டும், எ - று. (8)

வகைவீதங் காசெடை வகையா யெண்ணெய்க்குள்
தகையாகச் சொன்னேஞ் சத்தியமாமது
வகையாய் வழலையி லப்பேனேவார்த்திடாய்
சுகமாய்பதத்தில் தோன்றிடு முண்மையே.

(போ - ரை.) மேற்படி சரக்குகளை யெல்லாம் முன்சொன்ன எடைப்பிரகாரம் எடுத்து எண்ணெய்க்குள் போட்டுக் காய்ச்சினல், வழலையென்ற பேர்பெறும் அந்த வழலையானது நன்றாகக்காயும் பருவத்தில் அதிலிருந்தும் ஒரு உண்டை வெளிப்படும், எ-று. (9)

உண்டைவிளங்காய் போலேயுருட்டிடும்
கண்டிடுங் கொங்கணர் கடைக்காண்டம்சூத்திரம்
விண்டேயுரைத்தார் மேவிகலந்துபார்
சண்டாளந்திரச் சாற்றினர் சத்தியம்.

(போ - ரை.) அப்படி வெளியேவரும் உண்டையானது விளாங்காய் அளவாகவும் அதைப்போலவே கெட்டியாகவு மிருக்கும். அப்படி அது வாதபக்குவமறிந்து கொங்கணர் கடைக்காண்டத்தில் சொல்லியிருக்கின்ற வகையின் பிரகாரம் வேதையை பார்த்துக்கொள்ள வேண்டியது, எ - று. (10)

---

# பதஞ்சலியார்

## திருவாய் மலர்ந்தருளியவை

---

### வாத சூத்திரம்

பூமலியுங் கண்ணுடன் பாதம்போற்றி
புகலுவேன் வாதத்தின் திறவுகோலை
நாமுரைப்போ மைந்நான்கு பாடற்குள்ளே
நலமான வாதவித்தை ஞானமார்க்கம்
சோமனுற்ற வேணியர னுபதேசத்தால்
துறையறியும் பதஞ்சலியார் சூத்திரத்துள்
ஏமவித்தைக் காதியென்ற வஸ்துவுப்பை
யிதையறிய மாட்டாம லேங்கினரே.

(போ - ரை.) தாமரை மலர்போன்ற கண்களையுடைய சரஸ்வதி தேவியின் திருவடிகளை நமஸ்காரஞ்செய்து வாதத் திறவுகோலைச் சொல்லுகிறேன் கேட்பரயாக, ஏனென்றால் நான் சொல்வது வாதவித்தையும், ஞானவித்தையும், ஆனால் இருபது பாட்டிலே போயடங்கும். எந்தப்பலத்தால் சொல்லுகின்றேனென்றால் சிவபெருமான் எனக்கு உபதேசஞ்செய்த திருவருட் பலத்தாலாகும். ஆனல் அப்படிப்பட்ட இரசவாதவித்தைக்குப் பிரதானமான உப்பைத் தெரிந்துகொள்ளாமல் இரசவாதிகளெல்லாம் தவிக்கின்றார்கள், எ - று. (1)

ஏங்கினர் வஸ்துவுப்பைக் கண்டாற்போல
விதினுலே யிருக்குதென்பா ரெதுதானென்பார்
பாங்கியர்கள் தீட்டுமென்பார் விந்தாமென்பார்
பனிரண்டும் பதினாறும் பருவமென்பார்
தாங்கிவளர்த்திட்ட தலைப்பிள்ளை யென்பார்
சமாதியிலே வைத்திருக்குந் தலையோடென்பார்

தூங்கையிலே சொப்பனத்தி லாயிவந்து
சொன்னதென்பார் பூடென்பார் சுசியென்பாரே.

(பொ - ரை.) மேற்படி உப்பு இன்னதென்று தெரிந்து கொள்ளாதபடியால் பலவகையாக அந்த உப்பு இதிலிருப்பதென்றும், அதிலிருப்பதென்றும் சொல்லி வருத்தப்படுவார்கள். ஆனல், சிலர் தீட்டாகிய இரத்தமென்றும், சிலர் இந்திரியமென்றும், சிலர் அந்த உப்பு எடுப்பதற்கு பன்னிரண்டு வயசு ஆகுமென்றும், பதினாறு வயசு ஆகுமென்றும், சிலர் தலைப்பிள்ளையே அந்த உப்பென்றும், சிலர் சமாதியாக வைத்திருக்கும் பிணத்தின் தலையோடென்றும், சிலர் தங்களுடைய கனவில்சத்தி வந்து சொன்னதாகிய ஒருவஸ்துவென்றும், சிலர் பூண்டென்றும், சிலர் நிர்மலமான பொருளென்றும் இப்படி பலவகையாகச் சொல்லுவார்கள், எ-று.

சுசியென்பார் கோழிமுட்டை கிளிஞ்சில்ரண்டும்
சுத்தஜலமானுக்கல் தொழிலாமென்றும்
தகையென்புளிதானே பலமாமென்றும்
சாரமென்று மூத்திரமே தப்பாமென்றும்
குகையென்ன செவிநஞ்சு கண்ணீரென்றும்
கோசமென்றும் பூதமென்றும் குருவண்டென்றும்
திகையாதே சடத்திலேயங் காயமென்றும்
சிலுகமென்றும் பூநாகத்தெளிவெண்பாரே.

(பொ ரை.) மேலே சொன்ன வஸ்துவுப்பை கோழிமுட்டையென்றும், கிளிஞ்சில் என்றும், இந்த இரண்டும் ஜெயநீராகுமானல் வேதை முடியுமென்றும், புளியென்றும் நவாச்சாரமென்றும், மூத்திரமென்றும், அமிர்தமென்றும், கண்ணீரென்றும், கோசமென்றும், பஞ்சபூதங்களென்றும், குருவண்டங்களென்றும், ஐங்காயமென்றும் பூநாகத்தின் தெளிவென்றும், இப்படியாகப் பலமுறையாகச் சொல்லுவார்கள், எ - று. (3)

தெளிந்தவர்போற் சித்தர்சொன்ன சூத்திரத்தில்
சிக்கறுத்துப் பாராமல் செகத்துள்ளோர்கள்

அளுந்தியதி லுத்திபண்ணிப் பாராமற்றுன்
அவரவர்கள் நினைத்தபடி சுட்டுப்பார்த்து
இளந்த சொல்லாமென்று சொல்லினுல்வெறுத்
தில்லறமே நல்லறமென் றிருந்தார் கோடி
களந்தபிண போல்மெலிந்து சிலதுபேர்கள்
கானத்து மலையிடத் தருகினரே.

(போ - ரை.) சிலபேர்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டதுபோல் நடித்துச் சித்தர்களாற் சொல்லப்பட்டிராநின்ற சூஸ்திரங்களிலுள்ள சிக்குகளையெல்லாம் நீக்கி அவைகளை நன்று யாருய்ந்து பாராமல் அவர்கள் மனம்போல சுட்டுச் சுட்டுப் பார்த்து இந்தச் சாஸ்திரங்கள் பொய்யானவை யென்று சொல்லி அந்தச் சாஸ்திரங்களில் வெறுப்புண்டாகி இல்லறத்தையே நல்ல தரும மார்க்கமாகக்கொண்டு அதிலே யிருந்து மடிந்தவர்கள் இவ் வுலகத்தில் அநேகர்கள் இருக்கின்றுர்கள். செத்த பிணம்போல் மெலிவடைந்து காட்டையே தமக்கு இருப்பிடமாகக் கொண்டிருப் பவர்கள் சிலபேர்கள், எ - று. (4)

கருதினர் சிலபேர்கள் குருத்தான்வந்து
காட்டுவா ரென்றுசொல்லிச் சூஸ்திரத்தை
யுருவியே கிழித்தெறிந்து வீண்வாய்ப்பேசி
யுழன்றுதவிப் பார்களிதி லநந்தம்பேர்கள்
மருகினர் சிலபேர்கள் வாதவித்தை
வந்தவர்போற் சொல்லியவர் பிழைப்போமென்று
முருகினர் யோகதண்டங் காஷாயங்கள்
யோகநிஷ்டை பெற்றவர்போ லுருக்கொள்வாரே.

(போ - ரை.) சிலபேர்கள் குரு எழுந்தருளிவந்து சுட்டி காட்டினலே இது ஆகக்கூடுமென்று சித்தர்களால் சொல்லப்பட் டிரா நின்ற சூஸ்திரங்களைக் கிழித்துப்போட்டுத் தவிக்கின்றுர் கள் சிலபேர்கள் தமக்கு வாதவித்தை கூடிவிட்டதுபோல அந்நி யர்களுக்குச் சொல்லித் தாங்கள் பிழைப்பதற்காகப் பலவகையான

தந்திரங்களைச்செய்து யோகதண்டம் காஷாயம் முதலியவைப் பெற்று யோகநிஷ்டாபரர்கள்போல் வேஷங்கொண்டு திரிகின்றார்கள், எ - று. (5)

கொள்ளுவார் செபமாலை கையிலேந்திக்
குரடுமிட்டு நடைநடப்பர் குகையிற்கப்பால்
விள்ளுவார் வாதமொடு யோகம்ஞானம்
வேதாந்ததீதமுமே விசாரித்தோர்போல்
துள்ளுவாருபதேசம் செய்வோமென்பார்
சூதமணிகட்டுகிறேன் தொழில்பாரென்பார்
தள்ளுவார்பொருளாசை நமக்கேனென்பார்
சவர்க்காரம் குருமுடிக்கில் தனமென்பாரே.

(போ - ரை.) சிலபேர்கள் செபமாலையைக் கையினிடமாகக் கொண்டு காலில் பாதக்குறடு தரித்துக் குகைகளி னிடத்தி லிருந்து வாதம், யோகம், ஞானம் என்னும், இவைகளை வேதாந்த விசாரணை மிகவும் செய்தவர்களைப்போலச் சொல்லுவார்கள். இரசத்தை மணியாகக் கட்டுவோம் அதை நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள் என்று சொல்லுவார்கள். நமக்குப் பொருளின்மேல் ஆசையில்லை யென்பார்கள். சவர்க்காரத்தாலுண்டாகும் குருமருந்தை முடித்துவிடுவோமானால் அதுவே நமக்கும் பொருளாகுமென்று சொல்லுவார்கள், எ - று. (6)

தனமென்ன வாலைமனோன்மணிதா னென்பார்
சாராயம்பூசிக்கத் தண்ணீரென்பார்
கனமென்ன காந்தசத்துக் கிண்ணம்பண்ணிக்
கற்பமென்று பெண்ணுசை கடந்தோமென்பார்
மனமென்ன வாய்ப்புரட்டால் கைப்புரட்டால்
வாதவித்தை போற்காட்டி மயக்கஞ்செய்வார்
தினமிந்தப்படிதானே யுலகத்துள்ளே
சீவனங்கள் செய்வார்கள் சிலபேராமே.

(போ - ரை.) நாம் இப்பொழுது தனமென்று சொன்னது பொருளாயிருந்தாலும் இந்தப் பொருளல்ல மனோன்மணித் தாயான பொருள் என்பார்கள். யாராயினும் எதிரே வந்து இவ்வளவு ஞாயத்தைத் தேர்ச்சியடையும்படி சீடர்களுக்கு உபதேசிக்கின்ற நீரே சாரூயங் குடிக்கலாமாவென்று கேட்டாலோ அதற்கு அந்தச் சாரூயத்திற்கு ஒரு மந்திரத்தை அபிமந்திரித்தால் அது உடனே தண்ணீராய்விடும் பிறகு தோஷமில்லையென்று சொல்லுவார்கள். காந்தச்சத்தினால் கிண்ணஞ்செய்து அதனால் சற்பசாதனஞ்செய்து பெண்ணாசையை நீக்கினோமென்பார்கள். இந்தப் படியே கைப்புரட்டாலும் வாய்ப்புரட்டினாலும் தினந்தோறும் மேற்படி இரசவாதத்தில் விருப்பம் வைத்துள்ள சிலபேர்களை மயக்கி மோசஞ்செய்து ஜீவனஞ் செய்பவர்கள் இந்த உலகத்தில் அநேகர் இருக்கின்றார்கள், எ - று.

இந்தப் பதஞ்சலியார் வர்தசூத்திரம் என்கிற பெயரால் இருபது பாட்டுகள் அடங்கிய ஏழுநூல் இயற்றினர். அந்த நூலிலிருந்தே இந்த ஏழுபாட்டும் எடுத்துக் கொள்ளப்பட்டன. மற்றவைகளிலும் இந்தவிதமாகவே புத்தி சொல்லுகின்றார். ஆகையால் அவைகளை எழுதாமல் விட்டுவிட்டோம். ஆனாலும், இவருடைய முக்கிய கருத்து என்னவென்றால் உலகத்தில் அநேகர்கள் சிவவேடம் பூண்டு இரசவாதத்தில் விருப்பமுள்ள சிலபேர்களை எட்டுமாற்றுச் செய்வேன், பத்துமாற்றுச் செய்வேன் என்று சொல்லி மயக்கி அவர்களுடைய திரவியங்களையெல்லாம் கொள்ளை கொண்டு அவர்களை ஓட்டாண்டியாக்கிப் போகின்றார்கள். ஆகையால் அப்படிப்பட்டவர்களைச் சேர்க்காதேயுங்கள் என்பதாம். (7)

பதஞ்சலியார் வாதம்

முற்றிற்று.

---

# கூனர்

## திருவாய் மலர்ந்தருளியவை

---

### நாகரச வேதை

பிழைக்கவே நாகமைந்து கழஞ்சுசூதம்
 பேராகக் கழஞ்சிரண்டு வைத்துக்கொண்டு
அழைக்கவே நாகத்தைக் கறண்டியிட்டு
 அதையுருக்கி ரசங்கொடுத் தம்மியில்வைத்
திழைக்கவே வெடியுப்பு நாலரங்காய்ச்ச
 விட்டரைமூன்றே முக்காற் கழஞ்சுமப்பா
தழைக்கவரை ரண்டுநாழிகையில் வர்ணம்
 தான்வீசும்போது தண்ணீர்விட் டரைப்பே.

(பொ - ரை.) உலகத்தில் இந்த இரசவாதத்தைச் செய்து பிழைக்கும்படி நாகரசவேதையைச் சொல்லுகின்றேன் கேட்பா யாக. எப்படியென்றால், சிறுகன் துத்தநாகம் ஆறேகால் வராக னெடையும், இரசம் இரண்டரை வராகனெடையும் நிறுத்து வைத் துக்கொண்டு பிறகு, அந்த நாகத்தை ஒரு இரும்புக் கறண்டியில் போட்டு நன்றாயுருக்கி உருக்குமுகத்தில் அந்த ரசத்தைத் தொங் கித்துப்பின் அப்படி தொங்கிக்கப்பட்டிருக்கும் நாகத்தையும் இரசத்தையும் அந்தப்படியே யெடுத்துக் கல்வத்திலிட்டுக்கொண்டு அதில் நாலரங் காய்ச்சல் வெடியுப்பு நாலரையே மூன்றுவீசம் வராகனெடை நிறுத்துக் கூடப்போட்டு இரண்டு நாழிகை பரியந் தம் நன்றாயரைத்தால் அது ஒருவகையான நிறமுடையதாகவும் புகை கிளம்புவதாகவும் வருஞ் சமயத்தில் கொஞ்சம் தண்ணீர் விட்டு அரைக்கவேண்டும், எ - று. (1)

அரைக்கையிலே வந்தாச மெடுத்துக்கொண்டு
 அதின்பிறகு தண்ணீர்நீர் சாயவிட்டு

உரைக்கையிலே ரசமொக்க வழித்துக்கொண்டு
உடன்மெழுகு பதமானல் வில்லைதட்டி
நிரைக்கவே ரவிகாய்ந்து புடமிட்டசுண்ணம்
நிசமாகப் பதனமாய் வைத்துக்கொண்டு
உரைத்தெடுத்த ரசத்தைச் சிறுபயறுவீதம்
மூற்றதங்கத் தகட்டினிலே ரசம்விட்டுத்தேயே.

(போ - ரை) அந்தவிதமாகத் தண்ணீர்விட் டரைக்கும்போது கொஞ்சம் ரசம் கக்கிப்போகும். அதை வேறே எடுத்துக்கொண்டு அந்தத் தண்ணீர் அந்தக் கல்வில் இல்லாதபடி சாய்த்துவிட்டுப் பிறகு கல்விலிருக்கும் நாகரச வெண்ணெயை எடுத்துக்கொண்டு பார்த்தால் அது மெழுகுபதமா யிருக்கும். அந்த மெழுகைப் பில்லை தட்டி வெயிலில் உலர்த்தி நன்ருய்க் காய்ந்தபின்பு குக்குடபுடம் போட்டு எடுத்துப் பார்த்தால் அது சுண்ணமாயிருக்கும். அந்தச் சுண்ணத்தை எடுத்துவைத்துக்கொண்டு அதில் சிறுபயறு வீதம் தங்கத்தகடுதட்டி அதில் கொடுக்கவேண்டும், எ - று. (2)

தேய்க்கவே யுண்டுகொள்ளுந் தானும்
திரும்பரவி காய்த்துமே தகட்டிலப்பா
சாய்க்கவே முன்ரசங் கதிர்பயறுவீதம்
தடவிரவி காயவைக்க நொறுக்குமப்பா
மாய்க்கவே மஞ்சாடி மூன்றுசெம்பு
மாட்டிடவே ரவிபிரபை யாகும்பாரு
தேய்க்கவே யதையெடுத்து வெள்ளியேழு
செய்தங்கங் கொடுத்திட்வே செம்புமூன்றையே.

(போ - ரை.) அப்படி அந்தச் சுண்ணத்தை தங்கத்தகட்டில் தேய்த்தால் அந்தத்தகடு அந்தச் சுண்ணத்தை விடாமல் பிடித்துக் கொள்ளும், பிறகு அந்தத் தகட்டை வெயிலில் காயவைத்து மறு படியும் அப்படியே இன்னெருதரம் பூசிக்காயவைக்க அந்தத் தக டானது வெட்டையாய் நொறுங்கிப் போய்விடும் அப்படி நொறுங் கிய தங்கத்தை யெடுத்து மூசையிலிட்டு அதோடுகூட மூன்று

மஞ்சாடி எடைசெம்பு சேர்த்து உருக்கினுல் இரண்டும் ஒன்ருக ரேசித்து நல்ல செவந்த நிறத்தைக்கொடுக்கும். அப்படி உருகி நின்ற அதையெடுத்து வெள்ளியேழுபங்குக்கு இந்த மருந்து ஒரு பங்கு கொடுத்து உருக்கிவைத்துக்கொண்டு பிறகு சுத்திசெய்த செம்பு மூன்றுபங்கு எடுத்து உருக்கி அது நன்ருய் உருகிக் கண் விட்டாடுஞ் சமயத்தில் முன் உருக்கிவைத்திருக்கின்ற மருந்தைக் கொடுத்து ஊதினுல் எழுமாற்றுப் பொன்னுகும். அப்படி யாகா மற்போனுல் மறுபடியும் கொஞ்சம் தங்கம்சேர்த்து புதிய ஓட்டில் வைத்து உருக்கி யூதினுல் அந்தமாற்றுச் சரியாயிருக்கும், எ-று. (3)

---

# கொங்கணர்

திருவாய் மலர்ந்தருளியவை

---

## வேதைகள்

---

### அயச்செம்பு

ஆகுமே யயச்செம்பு மஞ்சாடியொன்று
மதிற்றங்கங்கழஞ் சொன் றுருக்கிக்கொண்டு
வாகுமே கந்தியது மஞ்சாடிக்கு
மனேசிலை யவ்விதம் பழச்சாற்றரைத்துப்பூசு
வாகுமே பதினறு புடம்போட்டப்பால்
வாதகமா மஞ்சாடி வெள்ளிக்கீய
பாகமே பொன்மாற்ற தெட்டுங்காணும்
பண்பாக வின்னமொரு வாதங்கேளே.

(போ - ரை.) அயத்திலுள்ள செம்பைச் சாஸ்திரக்கிரமமாக எடுத்து அந்தச்செம்பில் ஒருமஞ்சாடி எடையும், தங்கம் ஒன்றே கால் வராகனெடையும நிறுத்தெடுத்து இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து மூசையிலிட்டு உருக்கி இரண்டும் நன்றாய் ரேசிக்கும்படி செய்து வைத்துக்கொண்டு, ஒருமஞ்சாடி எடையும் எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றினு லரைத்து முன் உருக்கிவைத்திருக்கும் மருந்துக்குப்பூசி உலர்த்திக் குக்குடபுடம்போட்டு எடுத்துக் கொள்ள வேண்டியது. இப்படியே பதினறு புடம்போட வேண்டியது. இப்படி பதினறும் கிரமப்படி முடிந்தபின்பு ஒருமஞ்சாடி வெள்ளியை உருக்கி அதில் இந்த மருந்தைக் கொஞ்சம் கொடுத்தால் எட்டுமாற்றுப் பொன்னுகும், எ - று. (1)

---

## கந்தகத்தயிலம்

கேளே நீ கந்தகமோ பலம்பத்தாகும்
கேளிரதம் பலமொன்று குழிகல்லிலிட்டு
வாளேநீ யெருக்கம் பழுப்பதனைவாட்டும்
ரசம்சாமம் விட்டரைத்து ரவியில்வைத்து
நாளேநீ நாற்பதுநாள் வைத்தெடுத்தால்
நலமான தயிலம்வரு மெண்ணெய்போல
மீளேநீ பதனம்பண்ணி யடைத்துக்கொண்டு
வெள்ளிதகட்டிற்பூசி முன்பழுப்பிற் பொதியே.

(பொ - ரை.) இனிக் கந்தகத்தயிலத்தால் செய்யப்படும் இரச வாதம் வருமாறு: எப்படியென்றால், சுத்திசெய்த நெல்லிக்காய்க் கந்தகம் பலம்பத்தும், சுத்திசெய்த இரசம் ஒருபலமும், நிறுத் தெடுத்து இரண்டையும் கல்வத்தில் போட்டு எருக்கம் பழுப்பு கொண்டுவந்து நெருப்பில்வாட்டிப் பிழிந்து எடுத்து அந்தச்சாறு விட்டரைத்துச் சூரியனுக்கு முன்னே வெயிலில் நாற்பதுநாள் வரைக்கும் வைத்தெடுத்தால் அதிலிருந்து ஒருவகையான தயிலம் வரும் அது எண்ணெயைப்போ லிருக்கும். அந்தத் தயிலத்தைப் பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு வெள்ளியைத் தகடாக அடித்து அதற்கு அந்தத் தயிலத்தில் கொஞ்சம் எடுத்துப்பூசி முன்னேசொன்ன எருக்கம்பழுப்பை அரைத்து அதில் அந்தத் தகட்டைச் செருகிவைக்கவேண்டும், எ - று. (2)

பொதிந்தெருவி லுமிகலந்து புடமிட்டுப்பார்
புராரிநுத்த நாகமொரு கழஞ்சுகூட்டி
விதித்தசெம்புத் தகடுமிசை பூசிப்பூசி
மிக்கவுமிக் காந்தலிலே போட்டுப்பாரு
வதிந்தகங் காசலக்குப்பி தயிலந்தன்னை
யடைத்திடுநீ யதின்பிறகே யெந்தரோய்க்கும்
அதிர்ந்தவுள்ளி யிடித்ததனைப் பிழிந்ததண்ணீ
ரதில்நவாச்சாரங் கருப்புக்கட்டித் தண்ணீரே.

(போ - ரை.) அப்படி பொதிக்கப்பட்ட மருந்தை வருட்டியை ஒன்றும் இரண்டுமாகத் தூள்படுத்தி அத்துடன் உமிகலந்து புடம்போட்டு எடுத்துக்கொண்டு ஒன்றேகால் வராகனெடை துத்தநாகத்தை அத்துடன் கூட்டி உருக்கி வைத்துக்கொண்டு சுத்திசெய்த செம்புத்தகட்டில், அந்தக்கட்டைக் காய்ச்சிக் காய்ச்சிக் களாய்பூசுவதுபோல் பூசிப்பூசி உமிப்புடம் போட்டுப்பார்த்தால் அந்தச்செம்பானது (ஆறுமாற்றைக் காட்டும்படியான பொன்னாகும்) இதுவரைக்கும் இதை நிறுத்தி அந்தத் தயிலத்தை கங்காசலக் குப்பியென்று சொல்லப்படுகின்ற காசிக் குப்பியில் அடைத்து வைத்துக்கொண்டு மனிதர்கள் தேகத்தில் உண்டாகும் எப்படிப்பட்ட நோய்க்கும் வெங்காயத்தை யிடித்துப் பிழிந்து அதில் கொஞ்சம் நவாச்சாரமும், நல்லவெல்லமும் கூட்டி இந்தத் தயிலத்தில் மூன்று துளிவிட்டுக் கொடுக்க எல்லாம் குணமாய்விடும், எ-று.

---

## இரசவெண்ணெய்

தண்ணீரும் வட்டதுத்தி யுள்ளிகூட்டித்
 தானிடித்துப் பிழிந்தரசந் தன்னிற்சூதம்
விண்டிடவே மூன்றுநா ளிருந்துபார்த்தால்
 வெண்ணெயாம மேனியிலே குலைகபிடித்து
கண்ணரச மதில்வைத்துப் புடமூவைந்தில்
 கனலாகித் தீர்ந்துநிற்கும் புகையாதப்பா
வண்ணமுள்ள விரும்பியம் வைக்கக்கேளு
 மக்களே பொரிகாரம் கழஞ்சிரண்டே.

(போ - ரை.) வட்டத்துத்தி என்னும் மூலிகையும், வெள்ளைப்பூண்டும், ஒரு அளவாகக்கூட்டித் தண்ணீர்விட் டிடித்துப் பிழிந்து அந்தரசத்தில் ஒருபலம் இரசத்தைவிட்டு மூன்றுநாள் வரைக்கும் ஊறவைத்து நான்காநாள் பார்த்தால் அந்தரசமானது வெண்ணெயைப்போலிருக்கும் அவை யெடுத்துவைத்துக்கொண்டு குப்பைமேனி யிலையை ஒரு அளவாக எடுத்தரைத்து மூசைசெய்து அந்த மூசையில் முன்னர் வெண்ணெயான இரசத்தை வைத்து

மேலும் அந்த இலையினுலே மூடிச் சீலமண்செய்து இருபது முறை காடைப்புடம் போட்டால் அந்த ரசமானது புகையாமல் நிற்கும் அதையெடுத்து வைத்துக்கொண்டு வேதை மார்க்கப்படி செய்து கொள்ளலாம். இனி இரும்பிலிருந்தும் ஈயம் எடுக்கும் வகையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக, எப்படியென்ருல், இரண்டரை வராகனெடை வெங்காரம் நிறுத்து எடுக்க வேண்டும், எ - று. (4)

---

## அயவங்கம்

கழஞ்சான சிறுபூளைத் தூளாழாக்கு
 காட்டாடு தீண்டாநீர் கழுதைநீருரியாம்
விளைஞ்சகுதிரை சீர்நீரு முரிதானப்பா
 மிகமூன்று காப்படியு மொன்ருய்ச்சேர்ந்து
இளஞ்சவே மண்வெட்டி பழுக்கக்காய்ச்சி
 யிடிதூளைத் தரந்தாமாய் தூற்றித்தூற்றி
இளைஞ்சவே மூன்றுமுறை நீரிலேயிட்
 டிறுகவலை தயழுத்தவே யீயமாச்சே.

(பொ - ரை.) சிறுபூளை என்னும் மூலிகை கொண்டுவந்து நிழலில் உலர்த்தித் தூள்செய்தது ஆழாக்கு, ஆடுதீண்டாப்பாளைச் சாறு உழக்கு, கழுதை மூத்திரம் உழக்கு, குதிரை மூத்திரம் உழக்கு இம்மூன்றையும் ஒன்ருகக் கலந்து ஒரு மட்பாத்திரத்தில் வைத்துக்கொண்டு ஒருமண்வெட்டியைக் கொண்டுவந்து நெருப்பிலிட்டு நன்ருய்ச் செவக்கும்படி காய்ச்சி மேற்படி தூளை அந்தக் காய்ந்திருக்கும் மண்வெட்டிமேல் போட்டு மேற்படி சாற்றில் அழுத்த அந்தமண்வெட்டியிலிருந்து ஈயம் இறங்கும். இப்படியே மூன்று முறைசெய்தால் தேவையானமட்டும் கிடைக்கும். (அந்த ஈயத்தை எடுத்துக்கொண்டு வேதைக்குப் போகலாம், எ-று. (5)

---

## நாகக்கட்டு

ஈயம்விழுமதை யெடுத்துச் சேர்மானத்துக்
கியல்பாகச் செந்திரிக்க வெள்ளிநாலு
மாயமாஞ் செம்பாறு சேர்த்துத்தாக்க
மாற்றென்ன சரியாச்சு தின்னமொன்று
நாய்வேளைச் சாறுநாய்ப் பாகற்சாறு
நன்முன புகையிலைநீர் மூன்றுஞ்சேர்த்துத்
தோயவே நாகமது சுருக்குத்தாக்கத்
துத்தநாகக் கட்டுச் சொல்லொணுதே.

(போ - ரை) அப்படி அந்த மண்வெட்டியிலிருந்து விழுந்த ஈயத்தை மேலோர் சொல்லியுள்ள நூல்முறைப்படியே செந்தூரமாகச் செய்து வெள்ளி நான்கெடையும் சுத்திசெய்த செம்பு ஆறெடையும் சேர்த்து உருக்கி அந்த இரண்டும் நன்றுயுருகிக் கண்விட்டாடுஞ் சமயத்தில் செந்தூரத்தில் கொஞ்சம் கொடுத்தால் பத்தரைமாற்றுள்ள பொன்னுகும். அதைவிட்டு இனித் துத்தநாகத்தைக் கட்டுவகையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. எப்படியென்றால், நாய்வேளைச்சாறு ஒரு ஆழாக்கும், நாய்ப்பாகற்சாறு ஒரு ஆழாக்கும், பச்சைப்புகையிலைச்சாறு ஒரு ஆழாக்கும், ஆக மூன்றையும் ஒன்றுகக் கலந்து ஒரு பலம் துத்தநாகத்தை உருக்கி அது உருகும்போது மேற்படி சாற்றை அது ஆகுமட்டும் சுருக்குக் கொடுத்துக்கொண்டே வந்தால் நாகமானது கட்டிப் போகும். அப்படி கட்டப்பட்ட அந்தத் துத்தநாகக் கட்டின் பெருமைகளைச் சொல்லமுடியாது, எ - று. (6)

---

## லிங்கமெழுகு

சொல்லவே லிங்கமது களஞ்சாமப்பா
சுகமான நவாச்சாரங் களஞ்சுகால்தான்
வெல்லவே சவ்வீரம் பலமுமொன்று
மிகுபூரம் பலமிரண்டு முட்டைவெள்ளையூத்தி

யல்லவே சட்டிலே மஞ்சளூத்தி
யதிலிந்த மருந்தெல்லாம் விரவிக்கொண்டு
மெல்லவே லிங்கம்வைத்து வேறேயோடு
மேல்மூடிச் சீலைமண்ணு மூன்றுசெய்யே.

(போ - ரை.) என்னுடைய மாணுக்கனுன பெரியவனே, நான் இனி இலிங்க மெழுக்கினுல் செய்யப்படும் வேலையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக எப்படியென்ருல், சுத்திசெய்த இலிங்கம் ஒன்றேகால் வராகனெடையும், பச்சை நவாச்சாரம் காலேவீசம் வராகனெடையும், வீரம் ஒரு பலமும், பூரம் இரண்டு பலமும் நிறுத்தெடுத்துக் கொண்டுவந்து அதிலிருக்கும் வெள்ளேக் கருவைத் தள்ளிப்போட்டு மஞ்சட்கருவை மாத்திரம் வைத்துக் கொண்டு மேற்படி மருந்துகளை யெல்லாம் அம்முட்டைக்குள் போட்டு நன்ருய்க் கிளறி அதில் தேவையான மட்டும் லிங்கத்தைச் சொருகி மேலே ஓடுமூடி மூன்று சீலைமண் செய்யவேண்டும், எ - று. (7)

செய்ய சட்டியதில் மணலிட்டு முட்டைவைத்து
திரும்பவப்பில் மேலேயோர் சட்டிமூடி
வெய்யப்பத்து நாழிகை யாவாரை
விறகுகொண் டஃதெரியிட் டொழியலாக
வையனே மஞ்சளின் மெழுகுபோலே
யாகுமே பின்னமோ வாதமேது
துய்யமெழு கினையெடுத்து சூட்டிப்பாறு
சோர்லவயில்லா துவாதசமே தோணும்பாரே.

(போ - ரை.) நன்ருய்க் குடைவாயிருக்கும் சட்டி இரண்டு கொண்டுவந்து வாய்பொருந்தத் தேய்த்து ஒரு சட்டியில் மணல் கொட்டி அம்மணலின் மத்தியில் முட்டையை வைத்து மேலே ஓர் சட்டிமூடி அடுப்பில்வைத்து ஆவரை விரகினுல் பத்துநாழிகை பரியந்தம் சிறுதீயாக எரியிட்டுப்பின் அவ்வளவு நாழிகை ஆற விட்டு எடுத்துப் பார்த்தால் அந்த முட்டைக்குள் போட்டடைத்த

மருந்தெல்லாம் மஞ்சள் நிறமான மெழுகாயிருக்கும். அந்த மெழுக்கை யெடுத்து வைத்துக்கொண்டு வேதை மார்க்கங்கள் செய்யும் பிரகாரம் (செம்பு நாலும் வெள்ளி யிரண்டும் ஒன்ருக்கி உருக்கு முகத்தில் மேற்படி மெழுக்கில் ஒன்று கொடுத்தால்) யாதொரு பயமுமில்லாமல் பன்னிரண்டு மாற்ருன பொன்னுகும், எ - று.

பன்னிரண்டு மாற்றுப்பொன் என்று ஒன்று இல்லாவிட்டாலும் இவர் இங்கே அப்படி சொன்னது நல்ல மாற்றுள்ள பொன்னுகும் என்பதை விளக்குதற்கே யாகுமென்று கொள்ளவேண்டும் என்பதாம். (8)

---

## இரசக்கட்டு - இரசமணி

பாரடா மால்தேவி பலமிரண்டு
பாவிந்து ரசமதுதான் பலமுநாலு
யாரடா வரிதாரம் பொடித்துக்கொண்டு
வையனே முள்ளெளியின் வாயிற்போட்டு
சேரடா இரசத்தைவிட்டு கெஞ்சாசார்விட்டு
திரும்பவதின் வாய்வைத்து கட்டிகொண்டு
மாரடா சீலையஞ்சு மண்ணுஞ்செய்து
மருகவொண் ணரைமுழத்திற் புடமதாமே.

(போ - ரை) நான் இனி இரசத்தைக் கட்டி மணியாக்கும் வகையைச் சொல்லுகின்றேன் நீ கேட்பாயாக எப்படியென்ருல், இரண்டு பலம் அரிதாரமும் நான்கு பலம் இரசமும் நிறுத்து எடுத்துக்கொண்டு முன்னே அரிதாரத்தைமாத்திரம் பொடிபண்ணி ஒரு முள்ளெளியைக் கொண்டுவந்து அதின்வாயில் அந்தத் தூளைப் போட்டுப் பிறகு இரசத்தைக் கல்வத்திலிட்டுக் கஞ்சாச் சாற்றிஞல் மேற்படி இரசமானது மடியும்படி அரைத்து மறுபடியும் அதின் வாயில் வைத்துப் பிறகு அந்தவாயை நன்ருய்த் தைத்துவிட்டு அஞ்சு சீலமண்செய்து ஒன்றரை முழம் பள்ளம் வெட்டி

அதில் வருட்டி யடுக்கி மேற்படி எலியை வைத்துப் புடம்போட வேண்டியது, எ - று. (9)

புடமாறி யெடுத்துப்பார் மணியுமாச்சு
பூட்டிப்பார் வெள்ளீய முருகும்போது
திடமான மணியைவிட்டு நீர்துள்ளிப்போம்
திரைச்சீலை யிதனிலிட மணிதங்காது
இடமாக வெட்டேது குத்தேதுண்டோ
வெதிருளி தானேது மணிக்குமேதான்
படமான விடமில்லை பாரு பாரு
பார்வையில்லை வசியமா மணியுமாச்சே.

(பொ - ரை.) அப்படியாகப் போட்ட புடமானது நன்றாய்க் குளிர்ந்தபின் எடுத்துப் பார்த்தால் மேற்படி இரசமானது கட்டி மணியாய் நிற்கும் அந்தமணியை யெடுத்து வைத்துக்கொண்டு வெள்ளீயத்தை யுருக்கி அது உருகும்போது இந்தமணியை அதில் போட்டால் அந்த ஈயத்திலுள்ள நீர்வற்றிப்போகும் பிறகு அந்த ஈயம் வெள்ளியாய்விடும் அப்பேர்ப்பட்ட இந்தமணியை யாரொருவர் முடித்து வைத்திருக்கின்றாரோ அவர்களுக்கு எதிரிகளாலும் இன்னும் பேய்முதலிய துஷ்டதேவதைகளாலும், விஷஜெந்துக்களாலும், சூனிய முதலிய மந்திரோச் சாடனங்களாலும் உண்டாகும் கெடுதி ஒன்றுமில்லை எந்தக்காரியத்திற் போனபோதிலும் அந்தக்காரியம் யாதொரு தடையுமில்லாமல் நிறைவேறும், எ-று.

---

## அயகிண்ணம் - தாமிர கிண்ணம்

ஆச்சிரும்பு நாலுடனே செம்புநாலு
மதிற்கிண்ண மிரண்டுபண்ணித் தீர்த்துக்கொண்டு
வாச்சட்ட சாரணையை யரைத்துக்கொண்டு
மைந்தனே வயக்கிண்ணத் துள்ளேவைத்து
எச்சுதுத்த நாகத்தின் கட்டிவைத்து
பின்னமந்த சாரணையை யரைத்துவைத்து

நாச்செம்பு கிண்ணத்தால் மூடிக்கொண்டு
நாழிகை கொல்லனுலையிற் பறக்கவூதே.

(போ - ரை.) இனி அயக்கிண்ணத்தாலும் தாமிரக்கிண்ணத்தாலும் செய்யப்படும் வேதைகள் வருமாறு, எப்படியென்றால் இரும்பு நாலுபலமும் சுத்திசெய்த செம்பு நாலுபலமும் நிறுத்தெடுத்து அதில் ஒவ்வொன்றிலும் தனித்தனிக் கிண்ணமாகச் செய்து வைத்துக்கொண்டு வெள்ளைச்சாட்டரணை மூலம் ஒரு நிதானமாகப்பிடுங்கி அரைத்து மேற்படி அயக்கிண்ணத்தினுள்ளே வைத்து அதின் மத்தியில் கொஞ்சம் தித்தநாகம் வைத்து மேலும் அந்த சாட்டரணையை யரைத்து வைத்து முன்செய்து வைத்திருக்கும் செம்புக் கிண்ணத்தை மேலே மூடிச் சீலைமண் நன்றாக (நாளுக்கொன்றாய் ஏழுசீலைசெய்து) கருமானுடைய உலக்களத்திற் கொண்டுபோய் வைத்து நன்றாகச் செவக்கும்படி பறக்க ஊதவேண்டும் அயக்கிண்ணத்தில் வைக்கும் மூலிகைக்கு அளவு நூலில் சொல்லப்படாமையால் அந்த மூலிகை யெடைக்கு நாலிலொரு பங்கு தித்தநாகம் யென்றும் இரசவாதத்தில் தேர்ந்தவர்கள் நிச்சயம் பண்ணிக்கொண்டு கையாடுகின்றனர், எ - று. (11)

ஊதிடவே மேற்கிண்ண மருந்துபற்று
முள்ளிருக்கு மதைவழித்துக் கொஞ்சங்கொஞ்சம்
மோதிடவே நவசாரம் சேர்த்துருக்க
முன்மணிபோல் மணியாக விருக்குமப்பா
வீதிடவே நாகஞ்சுத்தி புதுசட்டிக்குள்
வைத்துமே தாணிக்காய்பத்து கடுக்காய்மூன்று
சூதிடவே மதுரஞ்சார் விட்டுமத்தித்
துப்பரவாய் மத்தங்காய் குடைந்துவைத்து.

(போ - ரை.) அப்படி ஊதவையேயானால் உள்ளிருக்கும் மருந்தானது மேலே மூடியாக மூடியுள்ள செம்புக்கிண்ணத்தில் வந்து பதங்கம்போல் பிடித்துக்கொள்ளும் அப்படி பிடித்துக் கொண்ட அந்தமருந்தை வழித்தெடுத்து மூசையிலிட்டுக் கூடக்

கொஞ்சம் பச்சைகவாச்சாரம் போட்டு உருக்கினல் அந்தத் தத்த நாகமானது மணிமணியாய்க் கட்டிப்போகும் அதை வேறே ஒரு சட்டியில் வைத்துக்கொண்டு பத்து தாணிக்காயும் மூன்று கடுக்காயும் எடுத்து ஊமத்தைச்சாறுவிட்டு நன்ருயரைத்துப் பிறகு நன்ருய்த் தேர்ந்து பெரிதாயிருக்கின்ற ஊமத்தங்காயைக் கொண்டு வந்து அதை நன்ருய்க் குடைந்துவிட்டு மேற்படி சாற்ருல் அரைத்த மருந்தில் பாதியெடுத்து அதற்குள் வைத்து நடுவில் முன்கூடிய நாகத்தை வைத்து மேலே அந்தக்காயின் தோலிஞலேயே மூடி நன்ருய் ஏழுசீலைமண் செய்யவேண்டும், எ - று.

---

## கெந்தகத் தைலம்

வைத்தஞ்சு புடம்போடு வெட்டையாகும்
  மாஞகம் நின்றிடைக்கு ரசமுஞ்சேர்த்து
உத்தமனே தொந்தித்துக் குடகரையில்வைத்
  துருக்க வெடைபோகா திவ்வெடைக்கு
முந்திகெந்தி பலமொன்று வாழைப்பழத்தோ
  லொன்ருக மாவிரண்டு பலமெடுத்து
நன்ருய்சுத்த வுப்பிலிட்டிடித்து மெழுகுபோ
  லாக்கியே புதிய கலசத்திட்டிடே.

(போ - ரை) அப்படி சீலைமண்செய்து பத்து வருட்டியில் புடம்போடவேண்டும் இப்படியே மறுபடியும் வேறு காயில்செய்து புடம் போடவேண்டும் இப்படி ஐஞ்சு புடம்போட்டு ஆனபின்பு அந்த நாகத்தை எடுத்து ஒடித்துப்பார்த்தால் கைக்கு ஒடியும்படியான வெட்டையாய்விடும் அப்படியான அந்த வெட்டை நாகத்தை நிறுத்துப்பார்த்து அது இருக்கும் எடைக்கு ரசத்தைச்சேர்த்து உருக்குமுகத்தில் தொந்தித்துக் கட்டியபின்பு பெரிய அடுப்புகரி ஒன்றைத் தொளைத்து அதில் மேலே தொந்தித்திருக்கின்ற நாகரசத்தை வைத்து உருக்கிப்பார்த்தால் இரசம்போகாமல் அப்படியே அந்தநாகத்தோடு உறவாய் நிற்கும், அப்படி இருக்கின்ற அந்தநாகத்தின் எடைக்கு ஒருபலம் நெல்லிக்காய்க் கந்தகமும்

இரண்டுபலம் ரஸ்தாளி வாழைப்பழத்தோலும் ஒன்ருகச்சேர்த்து உரலிற்போட்டு நன்ருக மெழுகுபதமாயிடித்து ஒரு புதிக்கலசத்தில் வைக்கவேண்டும், எ - று. (13)

இட்டுமே பாதாளத் தைலமிறக்கி
யித்தயிலங் காசெடை ரசமெட்டுக்கு
பட்டமிடு மத்திக்க வெண்ணெபோலாம்
பானுவிலே காயவிட்டு இனிமேற்கேளு
தொட்டகெந்தி சுத்திசெய்து ஒருபங்குக்கு
மாட்டியிந்த தைலம்விட் டரைத்துகெந்தி
மட்டம் பதினெட்டுபங்கு வைத்துச்சேர்த்து
மற்றுமொரு பங்கதனை குளிகைக்குபூசி.

(போ - ரை.) அப்படி கலசத்திலிட்ட மேற்படி மருந்தை பூத்தயிலமாக வாங்கி அந்தத் தயிலத்தில் ஒரு காசெடை எடுத்து ரசம்விட்டுக் காசெடையில் கொடுத்து மத்தித்தால் அந்த ரசம் வெண்ணெயாகும். அந்த வெண்ணெயை வெய்யிலில் காயவைத்து சுத்திசெய்த ஒரு பங்கு நெல்லிக்காய்க் கந்தகத்தை மேற்படி தயிலம் பதினெட்டுபங்கு விட்டரைத்து முன் சொன்ன இரச வெண்ணெயோடு சேர்த்து மீட்டும் நன்ருயரைக்க வேண்டும், எ - று. (14)

பூசியே புடம்போடு பதினெட்டாக
புடம்போடு செந்தூரம் நாகமாச்சு
ஏசியே நாகரச செந்தூரத்தை
யெடுத்தெடுத்து ஆணிக்கு ஏவிப்பாரு
தூசியே ஆணியப்பா வாதமெல்லாம்
தொடுமுன்னே பொன்னாகும் சூட்டிப்பாரு
ராசியே ரசவாதஞ் செய்வோரெல்லாம்
ரசகுளிகை யில்லாம லாகாதப்பா.

(போ - ரை.) அப்படி அந்த தயிலத்தால் அரைக்கப்பட்ட மருந்தையெடுத்து முன்கட்டிய நாகரசக் குளிகைக்குப் பூசவேண்

டும். அப்படி நன்ருய்ப் பூசினபிறகு புடத்துக்குப் பத்து வருட்டி யாக பதினெட்டு புடம் போடவேண்டும். அப்படி பதினெட்டு புடமும் போட்டுத் தீர்ந்தபிறகு எடுத்துப் பார்த்தால் அந்த நாக மானது செந்தூரமாய் இருக்கும். அந்தச் செந்தூரத்தை எடுத்து வைத்துக்கொண்டு இரும்பு ஆணி கொண்டுவந்து அந்த ஆணியில் இந்தச் செந்தூரத்தில் கொஞ்சம் கொடுத்தால் அது பொன்னுய் விடும். நான் சொன்னது மெய்யென்று நம்பிக்கையா யிருக்க வேண்டாம், நீ செய்துபார்த்து நம்பிக்கை வைப்பாயாக. ஆனுலும் இப்படி செய்யப்பட்ட இரசகுளிகை யில்லாமல் எப்படிப்பட்ட வாதிகளுக்கும் இரசவாதம் சித்தியாது, எ - று. (15)

---

வேறு

## அயச்செம்பு

ஆகாதோ புளிநடலைக்கிழங்கு பலம்பத்தப்பா
வயப்பொடி பலமொன்று வெங்காரம் வராகன்
ஏகாத கிழங்குடனே வெங்காரத்தை
யெடுத்தரைத்து ஏழுபங்கு லொருபங்குக்கு
மாகான வயப்பொடியில் பிசிரியேதான்
மைந்தனே பங்கேழு விசையுருக்க
யேகாத செம்பாகு மிந்தச்செம்பை
யெழுதய்யான் எழுக்கொன் றீயமாற்றும்.

(போ - ரை.) இனி அயச்செம்பால் செய்யப்படும் வேதை வருமாறு: எப்படியென்ருல், பத்து பலம் புளிநடலைக்கிழங்கும், ஒரு பலம் அயப்பொடியும், ஒரு வராகனெடை வெங்காரமும் கிறுத்தெடுத்து அயப்பொடியை வேறே வைத்துவிட்டு அந்தக் கிழங்கையும், வெங்காரத்தையும் ஒன்ருகச் சேர்த்து நன்ருயரைத்து எழு பங்காக்கி, ஒவ்வொரு பங்கிலும் ஒவ்வொருதரம் மேற்படி அயப்பொடியைப் பிசறி மூசையில் போட்டுருக்கினுல் அந்த அயமானது தடவைக்குத் தடவைக்குக் கொஞ்சம் கொஞ்சம் செம்பாகும். அப்படி அயத்திலிருந்தும் எடுக்கப்பட்ட இந்தச்

செம்பை எழு மாற்றுப்பொன் எழெடைக்கு ஒரு எடை கொடுத்தால் பத்தரைமாற்றுப் பொன்னாகும், எ - று. (16)

---

## கெந்திசெம்பு - உப்பு செந்தூரம்

மாற்றென்ன கெந்திதான் மேனிச்சாறு
வார்த்தரைத் தூமத்தையிலேயிற் பொதிந்துவப்பி
பார்த்தென்ன வைத்தவுடன் செம்புமாச்சு
பரிவாக வின்னமொன்று பகரக்கேளு
சாத்தென்ன வுவருப்புங் குமரிச்சாறும்
தான்விட்டு ஜாமமரைத்து கல்லுப்புக்கு
பூத்தென்ன கவசமிடு சீலைசெய்து
புதுசட்டிக் குள்வைத்து வெற்றிலைத்தூளே.

(போ - ரை.) இனி கந்தகத்திலிருந் தெடுத்துச் செய்யப்படும் செம்பின் வேதையும், கறியுப்புச் செந்தூரமும் சொல்லப்படும்; அவை எப்படியென்றால், தேவையான நெல்லிக்காய்க் கந்தகம் கொண்டுவந்து அதை குப்பைமேனிச்சாறு வார்த்து நன்றாய் மெழுகுபதமாக வரைத்து வழித்து உண்டையாக்கி ஊமத்தை இலையை யரைத்து அதற்குள்வைத்து வெயிலில் வைத்துக்கொண்டு வந்தால் அந்தக் கந்தகமானது செம்பாய் நிற்கும். இதையெடுத்து முன் அயத்தைச்செய்து வேதித்ததுபோல் வேதித்துக்கொள்ளலாம். இனி உப்பின் மார்க்கம் வருமாறு: நாம் சாப்பாட்டுக்காக வைத்திருக்கின்ற கறியுப்புத் தேவையானமட்டுக்கும் கொண்டு வந்து அதைக் கற்றாழஞ்சாறுவிட்டு ஒரு சாமமரைத்துப் பிறகு வழித்து ஒருபலம் கல்லுப்பு வாங்கிவந்து அதற்கு முன்னரைத்த மருந்தைக் கவசஞ்செய்து நாளொன்றுக்கு ஒரு சீலையாக எழு மண்கவசஞ்செய்து இரண்டு புதுச்சட்டிகள் கொண்டுவந்து நன்றாய் வாய்பொருந்தத் தேய்த்து வெற்றிலையை உலர்த்தி யிடித்த தூள் அந்தச் சட்டிகளில் ஒன்றுக்குள்போட்டு மேற்படி உப்பை அந்தத் தூளின்மேல் வைத்து மேலும் வெற்றிலைத்தூள் போட்டுவைக்க வேண்டியது, எ - று. (17)

தூளுலர்த்தி சட்டிக்குள் போட்டுமூடி
தூயபுகைபோகாமல் மறுசட்டிமூடி
நாளுலர்த்தி சீலைசெய்து எரிஜாமந்தான்
நலமான அடுப்பிறக்கி ஜாமமாற்றி
வேளுரைத்த செந்தூரமாகுமப்பா
விதமாகவதையுமினீர் விட்டரைத்து
பாளுரைத்து பில்லைதட்டி பீங்கானில்வைத்து
பக்குவமாய் ரவியினில்வை ஜெயநீராமே.

(போ - ரை.) வேறொரு சட்டியைச் சட்டிவாய்க்குச் சந்து தெரியாதபடி சீலமண்செய்து ஒருநாளெல்லாம் மூடினபடியே உலர்த்திப் பிறகு அடுப்பில்வைத்து ஒரு ஜாமம் வரைக்கும் சிறு தீயாக எரிக்கவேண்டும், அப்படி ஒரு ஜாமம் செய்பாகம் தவறாத படி எரித்தானபிறகு அடுப்பிலிருந்து இறக்கிக் கீழே வைக்கவேண்டும். பின்னர் ஒருசாமம்வரைக்கும் ஆறவைக்கவேண்டும். அந்தச் சாமம்போனபின் பிரித்துப் பார்க்கவேண்டும். அப்படி பிரித்துப் பார்க்கும்போது அந்த உப்பானது செந்தூரமாய் நிற்கும். அப்படி செந்தூரமாயிருந்த அந்த உப்பை எடுத்துக் கல்வத்தில் போட்டுக் கொண்டு வாய்நீரால் நன்றாயரைத்துப் பில்லைதட்டிப் பீங்கானில் அப்பி வெய்யிலில் வைக்க அது செயநீராகும். அந்தச் செயநீரைக் கொண்டு அநேக ரசவாதங்கள் முடித்துக்கொள்ளலாம், எ - று.

---

# மச்சமுனியார்

திருவாய் மலர்ந்தருளியவை

# வேதைகள்

## காப்பு

ஆதிவேதாந்த மனோன்மணியே காப்பு
அருளான முப்பாழாம் வெளியே காப்பு
சோதியிலே முளைத்தெழுந்த சுடரே காப்பு
சுத்தவெளிக் கப்புரத்தில் சுடராய் நின்ற
வாதியென்று பேர்படைத்த மாந்தர்க்கெல்லாம்
வகையாகச் சுருக்கமொரு பதினொன்றுக்குள்
நீதியுடன் சொல்லுகிறே னறிவுள்ளோர்க்கு
நிலையாக நாதவிந்து கருதிப்பூணே.

(போ - ரை.) உலகத்தினிடத்தில்: நாங்களே இரசவாதிக ளாவோம் என்று பேர்வைத்துத் திரிகின்றவர்களுக்கே (மச்ச முனி என்னும் பேர்பெற்றிருக்கின்ற நான்) நாதவிந்துகளின் மார்க்கத்தைச் சுருக்கமாகத் திரட்டி பதினொரு பாடல்களாக ஒரு நூல் சொல்லுகின்றேன். அந்த நூலானது இனிது முடியும் பொருட்டு ஆதியான வேதாந்த மார்க்கத்தா லறியப்படும் மனோன் மணியும் முப்பாழான சிதாகாசமும், தேஜோமயத்திலுண்டான சுடரும் காக்கவேண்டியது, எ - று.

## நூல்

பூணப்பா ஓங்கார முடல்தானுச்சு
புகழான நாதமது வுயிர் தானுச்சு
காணப்பா அகாரமது தீபமாச்சு
கனமான நாதமது பொருந்தப்பாரு

தோணப்பா விப்படியே வாதவித்தை
சொல்லிவிட்டேன் சூட்சத்தை யாருஞ்சொல்லார்
கோணப்பா ஜெகத்திலே யிளைப்புமானுல்
கோடிதரம் வைத்தாலுங் கூடாதோடும்.

(பொ - ரை.) நான் சொல்லவந்த இந்த முப்புவின் மார்க்கத்திற்கு உடலானது பிரணவமாகவும் உயிரானது அந்தப் பிரணவத்தின் நாதமாகவும் தீபமானது அதிலடங்கிய அகாரமாகவும் இருக்கும் ஆகையால் அந்த இலட்சணத்தோடு கூடிய யாதொரு பூநீற்றையெடுத்து அதில் நாதமாகிய உயிரைக்கொடுத்து இரசவாதத்தொழிலை முடித்துக்கொள்ளவேண்டும். இப்படிப்பட்ட சூட்சத்தை வேறே யாரும் சொல்லவில்லை. ஆனுல் அது செய்ய விரும்பினோர் உலகவாசையை விட்டிருக்கவேண்டும். அதை விடாமற்போனுல் இவ்விடத்தில் சொல்லியது முடியாதென்பது சத்தியம், எ - று. (1)

ஓடுமது கொச்சிவெள்ளைப் பலமோவொன்று
உறவான தங்கமது வராகனென்று
நாடியதோர் நவாச்சாரம் பலமேபோடு
நலமான கெந்தியுந்தான் பலமேபோடு
தேடியதோர் சவ்வீரம் பலமேபோடு
திடமான வெங்காரம் பலமேபோடு
ஆடியதோர் ஐந்துசுண்ண செயநீராலே
அரகரா ஒருசாமம் ஆட்டுவாயே.

(பொ - ரை.) கொச்சிதேசத்து வெள்ளைப் பாஷாணம் ஒரு பலமும், தங்கம் வராகனெடை ஒன்றும், நவாச்சாரம் ஒருபலமும், நெல்லிக்காய்க் கந்தகம் ஒருபலமும், வீரம் ஒருபலமும், வெங்காரம் ஒருபலமும் ஆக ஐந்து பலமும் ஒருவராகனெடையும் கல்வத்தில்போட்டு, இதற்கு முன்னதாக வெவ்வேறு உண்மை நூல்களிற் சொல்லியபடியே முடித்துவைத்திருக்கின்ற பஞ்சசுண்ண செயநீரை நான்கு சாமம் அரைக்கவேண்டும், எ-று. (2)

ஆட்டியே வில்லைசெய்து ரவியில்போட்டு
ஆணுப்பு பெண்ணுப்பு கீழ்மேலிட்டு
காட்டாவின் முட்டைஐந்தில் புடமுந்தீரு
கத்தெனப் பினப்பெடுத்து செயநீராட்டு
பூட்டாக வெகுசாமம் ஆட்டிப்பின்பு
புகழாக வில்லைசெய்து ரவியில்போடு
தேட்டான செங்கதிர்போல் செந்தூரந்தான்
திறமான வெள்ளியிலே பத்துக்கொன்றே.

(பொ - ரை.) அந்தயாதிரியாக நான்குசாமம் ஆனபின்பு பில்லைதட்டி வெயிலில்வைத்து, இரண்டு அகல்கள் கொண்டு வந்து வாய்பொருந்தும்படி தேய்த்து ஒரு அகலில் பூநீற்றில் ஒரு வகையானதாகிய ஆணுப்பைக் கொண்டுவந்து கீழேயிட்டு மேலே பில்லையைவைத்து அதின்மேல் பெண்ணுப்பைவைத்து மேலும் அகல்மூடிச் சீலைமண் செய்து ஐந்து காட்டு வருட்டியில் புடம் போட்டு ஆறவிட்டெடுத்துக் கல்வத்திலிட்டு மறுபடியும் அந்தச் செயநீரைக் கொண்டே ஒருசாமம் அரைத்துப் பில்லைசெய்து வெயிலில் போட்டு (5) நாள் சென்ற பிறகு வெயில்போட்டு அது செந்தூரமாயிருக்கும், அந்தச் செந்தூரத்தை எடுத்து வைத்துக்கொண்டு பத்துப்பங்கு வெள்ளியையுருக்கி இந்த மருந்து ஒரு பங்கு கொடுத்தால் (பத்து மாற்றுன பொன்னுகும்,) எ - று. (3)

---

## கந்தக செம்பு

ஒன்றுன கெந்திசெம்பு செப்பக்கேளு
ஓதுகிறேன் கெந்தியின்காண் பலமேயொன்று
நன்றுன வரிநெல்லிச் சாற்றுலாட்டி
நலமாக வில்லைசெய்து செயநீராட்டி
பாண்டாக வைத்துசுண்ணச் செயநீராலே
பதராமற் கொச்சிவெள்ளைக் கவசங்கட்டி
தண்டான பச்சைவெள்ளை மேலேயப்பித்
தயவாக கெந்தியென்று வெள்ளையெட்டே.

(போ - ரை.) இனி கந்தகச்செம்பின் வேதையைச் சொல்லு கிறேன் கேட்பாயாக. எப்படியென்றால், ஒருபலம் நெல்லிக்காய்க் கந்தகத்தை அரிநெல்லிக்காய்ச் சாற்றினால் நன்றாயரைத்துப் பில்லைசெய்து வெயிலிலுலர்த்திப் பின்பு முன் செயநீராலரைத்துப் பின்பு, எட்டுப்பல கொச்சிதேசத்து வெள்ளைப் பாஷாணத்தை மேற்படி செயநீராலரைத்து அதன் மேலும் கீழும் கவசஞ் செய்ய வேண்டும், எ - று. (4)

எட்டிலே யிருக்கின்ற சோதியாலே
   யெழுப்பியிந்த வுலைதனிலே வைத்து ஊது
மட்டிலா தில்லாது சாமமென்று
   வகையோடே யெடுத்ததனை யரைத்துக்கொண்டு
கெட்டியாய் யஞ்சிலொன்று செம்புதானுங்
   கெட்டியாக தங்கத்திற் பாய்ச்சு பாய்ச்சு
சட்டமாய் பத்துக்கு ஒன்றேபாய்ச்சு
   சாதகமாய் பின்பெடுத்துப் புடத்திற்போடே.

(போ - ரை.) பின்பு கவசஞ் செய்த மருந்தை சொல்லனது உலையில் வைத்து நன்றாயூதி ஒரு சாமம் வரைக்கும் சென்ற பின்பு அதை யெடுத்துப் பொடியாக்கி வைத்துக்கொண்டு இந்த செம்பு ஐந்தில் ஒருபங்கும், தங்கத்தில் ஒரு பங்கும், சேர்த்துப் புடம்போட வேண்டும், எ - று. (5)

போடதிலே வணுவள்வு தப்பிற்றானால்
   போய்விடும் போட்டசரக் கெல்லாந்தானும்
போடதிலே தீயளவு மிஞ்சிற்றானால்
   புகழான வேதையென்ற சரக்குப்போகும்
போடதிலே தீட்சையெழுத் தில்லாவிட்டால்
   பொருளான வாதமெல்லாம் வீணாய்ப்போகும்
போடதிலே போச்சென்று விட்டுவிட்டால்
   புண்ணியமாந் தவமெல்லாங் கூடாவாறே.

(போ - ரை.) அப்படி போடும் அளவில் கொஞ்சம் தவறி னாலும் இதுவரைக்கும் கஷ்டப்பட்டுப் போட்டு செய்த சாக்குக ளெல்லாம் வீணாய்ப்போகும். தீத்திட்டம் கொஞ்சம் அதிகமாய் விட்டால் இரசவாதச்சரக்கு கெட்டுப்போகும். தீக்ஷை யெழுத்தை விட்டுச் செய்தாலோ இரசவாதம் பலிஷ்டப்படாது. இப்படி போய் விட்டதென்று செய்யாமல் விட்டுவிட்டாலோ தவஞ்செய்ய இட மில்லாமற்போகும், எ - று. (6)

வாரான கோபத்தைத் தீராவிட்டால்
வாதமென்ற பேச்சுமொரு காதம்போகுந்
தீராத பிராணய மில்லாப்பாவி
திரிலோகஞ் சென்றாலும் வாதங்காணான்
கூறான குருவோடே யெதிர்த்தகோபி
கோடிதவம் செய்தாலும் ஞானங்காணான்
தேரான சரக்கதிலு மட்டியானால்
திரணமுந்தான் பாயாது திண்ணந்தானே.

(போ - ரை.) யாரொருவருக்குக் கோபம் ஒழியவில்லையோ அவர்களுக்கும், பிராணயாமம் பலிக்கப்பெறாதவர்களுக்கும்; ஆசி ரியரிடத்தில் எதிர்த்து சண்டைசெய்யும் கோபிகளுக்கும் இரசவாத மானது அணுவளவுகூட சித்திக்காதென்பது சத்தியம், எ - று.

திண்ணமுள்ள யேமவித்தை யிடக்கண்பாரு
திறமாக வெள்ளிதனை வலக்கண்பாரு
வண்ணமுள்ள வாலையது மகாரம்போடு
வாமத்தின் பக்கமது வகாரமாச்சு
எண்ணமுள்ள மேல்வீட்டிற் சிங்கென்றாது
ஏகாந்தம் தோன்றுமடா எட்டிப்பாரு
கண்ணிமையுங் கொட்டாமல் பார்த்தையானால்
காணுமடா வைந்தெழுத் தீபம்பாரே.

(போ - ரை.) இப்படிப்பட்ட சத்தியத்தையுடைய பொன் செய்யும் வழியானது வலக்கண்ணால் பார்க்கத்தக்கதாகும். வெள்ளி

செய்யும் வழியானது வலக்கண்ணுல் பார்க்கத்தக்கதாகும். ஆகையால், மகாரத்தையும் வகாரத்தையும் பக்கங்களில் பாவித்து மேல் வீடாகிய சுழிமுனை யென்னுமிடத்தில் சிம் என்று ஊதினுல் ஏகாந்தமாகிய ஞானம் வெளிப்படும். அப்பொழுது அதை நீ பார்த்தாயானுல் பஞ்சாட்சர சொரூபமானது உனக்கு அங்கே வெளியாக்கும், எ - று. (8)

பாரிலே வங்காளம் பச்சையப்பா
   பரிவாக சமமாகப் பலமுந்தூக்கி
நேரிலே மனோசிலையும் பலமுந்தூக்கி
   நெடிதான விணங்கன்தான் பலமுந்தூக்கி
சீரிலே உவக்கரந்தான் பலமுந்தூக்கி
   சிறப்பான கொச்சிவெள்ளை பலமுந்தூக்கி
காரிலே காளகண்டத் தப்பிப்போகும்
   கனமான வைந்துசுண்ணச் செயநீராலே.

(போ - ள.) உலகத்தினிடத்தில் வங்காளப்பச்சை ஒரு பலமும், மனோசிலை ஒருபலமும், சுறியுப்பு ஒருபலமும், சவர்க்காரம் ஒருபலமும், கொச்சி வெள்ளைப்பாஷாணம் ஒருபலமும் நிறுத்தெடுத்து மூன் அஞ்சுசுண்ணச் செயநீரால் அரைக்கவேண்டும், எ - று. (9)

ஆலமென்ற சரக்கதுதா னருணனுகு
   மழகாக வைந்தெருவிற் புடமுந்திரு
கோலமென்ற வழுரியுப்பு நாதத்தாலே
   கொள்ளையப்பா வாதமதற் குயிரதாகுஞ்
சீலமென்ற நாதத்தை யறியாதார்க்கு
   செகமெலாந் திரிந்தாலும் வாதங்காணு
கோலமுடன் செந்தூரந் தன்னைத்தாக்கி
   யுத்தமனே வெள்ளியிலே பத்துக்கொன்றே.

(போ - ள.) அப்படியரைத்து பில்லைசெய்து வெயிலில் வைத்தால் ஒருவகையான செவப்பாகும். அப்படியான பில்லையை

ஐந்தெருவில் புடம்போடவேண்டும். அப்படிப்பட்ட புடத்தை பிரித்து பார்த்தால் செந்தூரமாயிருக்கும். அந்தச் செந்தூரத்தை வெள்ளி பத்துபங்குக்கு ஒருபங்கு கொடுத்தால் பத்துமாற்று பொன்னாகும். ஆனால் இதுவெல்லாம் அமுரியுப்பினாலும் நாதநீரினாலும் உண்டான உயிராகும் இதை யறியாதவருக்கு இந்தவாதம் கைகூடாது, எ - று. (10)

ஒன்றாக மனந்தன்னை நிறுத்தவேண்டு
மொருமனதாய் குருபதத்தைக் காக்கவேண்டும்
பன்றாக பிராணாயஞ் செய்யவேண்டும்
பரிவாக தெரிசனையே பார்க்கவேண்டும்
நன்றாக விப்படியே பதினொன்றுந்தான்
நலமாக செப்பினதோ ரருளைப்போற்றி
நன்றாகப் பார்த்துணர்ந்து வருவீர்மக்காள்
நாரியரைச் சேராதீர் நாசமாவீர்.

(பொ - ரை.) இரசவாதஞ் செய்வதில் ஒருவன் எவ்வளவு கைபாகஞ் செய்பாகங்களில் சாமர்த்தியமுடையவனா யிருந்தாலும் அவன் மனத்தை ஒருநிலையில் நிறுத்தவேண்டும். குருவின் திருவடிகளைக் காக்கவேண்டும். பிராணாயாமசித்தியைப் பெறவேண்டும். சிவதெரிசனஞ் செய்யவேண்டும். இந்தப் பதினொன்று பாடல்களைக்கொண்ட நூலை நன்றாய்ப் பார்க்கவேண்டும். மேற்சொன்னபடி செய்யாவிட்டாலோ அவனுக்கு அந்த இரசவாதம் ஒருக்காலும் சித்திக்கமாட்டாது. இது பெரியோர்கள் வாக்காகும். ஆகையால் இதை இரசவாதிகளெல்லாம் நன்றாய்க் கவனிக்கவேண்டும், எ - று. (11)

———

# அகஸ்தியர்

திருவாய்மலர்ந்தருளியவை

# வேதைகள்

## காப்பு வெண்பா

வானும்புவியு மதியுங்கதிரொளியும்
தேனுந்தெளிந்த சிவகுருவே—தானுந்தன்
நான்கரையுமாராய்ந்து நந்நூலா மைம்பதையும்
தானருளுங் குஞ்சரத்தின்தாள்.

(போ - ரை.) ஆகாசமும், பூமியும், சூரிய சந்திரர்களும் அவர்களின் ஒளியும் ஆகிய இவைகளெல்லாம் தானேயாய் விளங்காநின்ற சிவமென்னும் குருமூர்த்தமா யெழுந்தருளிவந்தவர், தாமும் தம்மால் அருளிச்செய்யப்பட்டனவாகிய நான்கு வேதங்களேயும் நன்றாக வாராய்ந்து ஐம்பது பாட்டுகள் அடங்கிய இந்த நூலை நான் சொல்லும்பொருட்டு ஞானமுகத்தையுடைய விநாயகக் கடவுளின் இரண்டு திருவடிகளும் என்முன்னின்று இந்த நூல் இனிது முடியும்படி திருவருள்செய்யும், எ - று.

## நூல்

மயமான மூப்பூவின் மார்க்கந்தன்னை
 வைத்தியத்திலாக்கியே விரித்துச் சொல்வேன்
ஜெயமான கணபதியுங் கந்தனும்
 சிவனோடே யுமையாள்மார் வதியுங்கூட
நயமாக வெப்போது முன்னேநின்று
 நாடியே மூப்பூவை நயந்துகேட்க
வயமாகச் சொல்லுகிறேன் ஐம்பதுக்குள்
 வைத்தியரே யிப்பொருளை வணங்கிக்கேளீர்.

(போ - ரை.) வேதைகளுக்கும், வைத்தியர்களுக்கும் ஓர் அருள்மயமாக வழங்கிவராநின்ற முப்புவைச் செய்யும் கைபாகம் செய்பாகங்களை, விநாயகக்கடவுளும், முருகக்கடவுளும், சிவபெருமானும், உமாதேவியும் கேட்கும்படி அவர்கள் முன்னிலையில் நின்று மேற்படி மார்க்கத்தை ஐம்பது பாட்டுகளால் சொல்லுகின்றேன். ஆனால் நல்ல உண்மை சாஸ்திரங்களை முறையாகக் கற்று அவைகளின் முறைப்படியே நடந்துவாராநின்ற ஆயுள்வேத பண்டிதர்களே நீங்கள் நான் சொல்லும் இந்த நூலை நன்றாய்க் கேட்பீராக, எ - று. (1)

---

## வணக்கம்

வணங்குவது மாரையென்றாற் குருவின்பாதம்
வாலையொடு சிவன்பாதம் நிர்வாணிபாதம்
வணங்குவது யாரையென்றாற் கணபதியுங்கந்தன்
வாகாகப் பூசிக்க வரிசையாகும்
வணங்குவது மைம்பதுக்குள் முப்பூவப்பா
வாதத்துக் காகிறது வைத்தியத்துக்காகும்
வணங்குவதைம்பதையும் வணங்கவேண்டும்
வைத்தியத்துக் கிஃதுயிர்காண் வாதிகேளே.

(போ - ரை.) (வயித்தியர்களே! நீங்கள் இந்த முப்புவின் மார்க்கத்தைத் தெரிந்துகொள்ள விரும்பினால்) உங்களுடைய ஆசிரியர்களுடைய திருவடிகளையும், சத்தியின் திருவடிகளையும், சிவத்தின் திருவடிகளையும், நிர்வாணியின் திருவடிகளையும் முறைப்படி பூசைசெய்து, பிறகு மேற்படி மார்க்கத்தைச் சொல்லாநின்ற இந்த ஐம்பது பாட்டுக்களையும் நமஸ்காரம் செய்யவேண்டும். இது வாதமார்க்கத்துக்கே பெரும்பாலும் சொல்லப்பட்டது. வயித்தியத்திற்கும் ஆகும். ஆனால் இது வயித்தியத்திற்குரிய மருந்துகளுக்கு உயிர் போன்றதாகும். ஆகையால் வாதிகளே இந்த முறையை நீங்கள் நன்றாய்க் கேளுங்கள். (2)

---

## புத்தி கூறல்

வாதியென்று மிந்தமுறை யறியவேண்டும்
வாதந்தா னேதுசெய்ய வைத்தியமேதப்பா
ஆதியென்ற வைத்தியந்தான் பிரமவித்தை
ஆத்துமாவை ரட்சித்தானவனே சித்தன்
நீதியென்ற தர்மமது நினைக்கவேண்டும்
நீணிலத்தி லுயிர்களுக்கு மிரங்கவேண்டும்
ஓதியதோர் கன்மம்விட்டுத் தர்மமாதி
உத்தமனே வைத்தியத்துக் குறுதிகாணே.

(போ-ரை.) உலகத்தில் வாதியென்கிற பேரையுடையவர்களாயிருந்தால் இந்த முப்புவின் மார்க்கத்தை அவசியம் உணர்ந்திருக்கவேண்டும். அப்படி உலகத்தில் செய்யப்படுகின்ற இரசவாதமும், வயித்தியமும் எதற்காகச் சொல்லப்பட்டன. வயித்தியமானது உலகத்தில் உயிர்களைக் காப்பாற்றுவதாகையால் அது பிரம வித்தையாகும். வாதமென்றாலோ சித்தாடுவதற்குத் தகுந்த வித்தையாகும். எவனொருவன் மேற்படி வித்தைகளில் யாதேனுமொன்றைச் சாஸ்திரப்படி கற்றுக்கொண்டு உயிர்களைக் காப்பாற்றுகின்றானோ அவனே சித்தப் புருஷனாவான். ஆனால் அப்படி செய்கின்றவன் தர்மவானாக விருக்கவேண்டும், உயிர்களிடத்தில் காருண்யமிருக்க வேண்டும் கருமத்தை யொழித்தவனாயிருக்கவேண்டும், அப்படியிருப்பது வயித்தியத்திற்கு பலமுடையதாகும், எ-று.

---

## காரண முறைத்தல்

உறுதியாம் ஒருநூற்றினம் பதுக்குள்
உரைத்த தொருலோக மாரணத்தைக்கேளு
உறுதியென்ற முப்பூவின் சுண்ணம்வேண்டும்
உதவாட்டா லொன்றுமில்லை புடைந்துநீராம்
உறுதியென்ற ஐம்பதையும் விட்டபேர்க்கு
உலகத்தில் வைத்தியந்தா னுண்டோவில்லை

உறுதியென்ற முப்பூவை நீற்றிக்கொண்டு
ஒகோகோ லோகமெல்லா மொக்கநீற்றே.

(போ - ரை.) ஓ வாதிகளே! இந்த உலகத்தினிடத்தில் என்னால் சொல்லப்பட்டிருக்கின்ற நூற்றைம்பது பாடல்களைக்கொண்ட ஒரு நூல் உண்டு. அந்த நூலில் லோகங்களையெல்லாம் மாரண வித்தையாகிய மந்திரோச்சாடனத்தினால் நீற்றும்படியான வகையைச் சொல்லியிருக்கின்றேன். (ஆனால் அந்த முறைப்படி செய்வோனுக்கு அந்த லோகங்கள் நீறிப்போகுமே யொழிய இரசவாதத்திலாயினும் ரோகத்தின்மேலாயினும் ஒருக்காலும் போய் வேலைசெய்யா ஆகையால் அந்த நீற்றினங்களுக்கும் முப்புச்சுண்ணம் வேண்டியது அவசியம். அப்படிப்பட்ட முப்புச்சுண்ணமானது கைகூடாவிட்டால் லோகங்களெல்லாம் பிரயோசனமில்லாமற் போகும். ஆகையினாலேயே நான் மீண்டும் இந்த ஐம்பது பாடல்கள்கொண்ட நூலில் முப்புமார்க்கத்தை நன்றாகச் சொல்லியிருக்கிறேன். அப்படி யிருப்பதால் இதைச் செய்யாமல்விட்ட வைத்தியர்களுக்கு தாங்கள் செய்யும் வயித்தியம் ஒரு பயனையும் கொடுக்கமாட்டாது. ஆகையால் நீங்கள் முதலில் இந்த நூலின் பிரகாரம் முப்புச்சுண்ணத்தை முடித்துக்கொண்டு பின்னர் மற்றைய லோகங்களை யெல்லாம் நீற்றவேண்டும், எ - று. (4)

---

## முன்னர் அறியவேண்டியவை இவையெனல்

நீற்றுவகை யறிந்தவனே வைத்தியனாகும்
நிலைத்ததொரு வாதியென்றால் நீற்றுவான்பார்
சாற்றுகின்ற முப்பூவை யறியவேண்டும்
சாதகமாய்க் கைமுறைகள் தப்பாவண்ணம்
பார்த்துரைத்து சுத்திமுறை காணவேண்டும்
பருவமாய்க் குருமுடிக்கும் பாகம்வேண்டும்
சாஸ்திரத்தின் முறையறிந்து குருவைசெய்தால்
தவறாது பொருளென்றுஞ் சார்ந்துபாரே.

(போ - ரை.) மேலே சொன்னபடி லோகங்களையெல்லாம் நீற்றுஞ்சக்தியுடையவனே வயித்தியனுவான். இரசவாதியானவன் லோகங்களை நீற்றுவான். ஆனால் இரசவாதியா யிருந்தாலும் இல்லாமற் போனாலும், வயித்தியனுயிருந்தாலும் இல்லாமற்போனாலும், எவனொருவன் கைமுறை செய்முறை தவருதபடி முப்பு வைச்செய்து முடிக்கின்றானே அவனே இரசவாதியும் வயித்தியனு மென்று சொல்லப்படுவான். இப்படியாகச் சொல்லப்பட்டு வராநின்ற குருமருந்தை முடிப்பதற்குச் செய்பாகங் கைபாகங்களும், சுத்திக்கிரமமும் சாஸ்திரப்படி செய்வார்களானால் மேற்படி மருந்தானது நன்ருக முடிவு பெறும், எ - று. (5)

---

## இது இன்னூருக்குச் சொன்னதெனல்

பாரடாமுன்னுரைத்த முப்பூவெல்லாம்
பரிவான சித்தருக்குஞ் சிவயோகிக்கும்
சேரடா வைம்பதுக்குள் சொன்னேன்முப்பூ
செகத்திலுள்ள மானிடர்க்குச் செய்யவேண்டி
ஊரடா வேறுகொண்ட வுலுத்தருக்கு
உறுதியாய்த்தேகமது பெலத்துப்போச்சு
ஆரடாவென்னைபோற் சொல்லப்போருர்
ஆச்சரியமுப்புவி னருமைபாரே.

(போ - ரை) மாணுக்கனுகிய பேர்பூண்டவனே! நான் இதுவரைக்கும் சொன்ன நூல்களிலுள்ள முப்புக்களெல்லாம், சித்தப் புருஷர்களுக்கும், சிவயோகிகளுக்குமே யாகும். ஆனால் இந்த நூலில் சொல்லியிருக்கின்ற முப்புவோவென்றால், இந்த உலகத்திலுள்ளவர்கள் தங்கள் தேகத்தைச் சித்தியாக்கிக்கொள்ளும் நிமித்தமே சொல்லப்பட்டதாகும், ஆகையால் என்னைப்போல் வேறெந்த சித்தர்களும், முனிவர்களும் சொல்லவில்லை. ஆகையால் இந்த முப்புவின் அருமையைநீ நன்ருய் ஆராய்ந்து பார்ப்பாயாக, எ - று. (6)

---

## முதல் உப்பின்மார்க்கம்

பாரென்ன வுவருப்பைக் கொண்டுவந்து
பரிவாகச் சுத்தஜலந் தன்னிலிட்டுச்
சீருடனே கலக்கியே தெளியவைத்துத்
தெளிவாகக் காய்ச்சிநன்றாய் வற்றினக்கால்
நீரிலே மறுபடியும் விட்டுக்கிண்டி
நிலையாகத் தெளியவைத்து மிருத்துக்கொண்டு
வாரமுடன் காய்ச்சியே வற்றவைத்து
வாகாகவிப்படியே காய்ச்சுகாய்ச்சே.

(போ - ரை) இனி அந்த முப்புச்செய்யும் மார்க்கத்தைச சொல்லுகின்றார். எப்படியென்றால், போதுமான சவட்டுப்பை நல்லதாகப் பார்த்துக்கொண்டுவந்து சுத்தஜலம் என்று சொல்லு கின்ற (பனிச்சலத்தில்) போட்டுக்கலக்கிப் பின்பு தெளியவைத்து அந்தத் தெளிவைபிருத்து காய்ச்சிக்கொள்ளவேண்டியது. பிறகு நின்றிருக்கும் அந்த உப்பில் மறுபடியும் சுத்தஜலம் விட்டுக் கலக் கித் தெளிவிருத்துக் காய்ச்சவேண்டியது. இப்படி காய்ச்சிக் கலக் கிக் காய்ச்சி அடியில் ஒன்றுமில்லாம லாய்விட்டபிறகு முன் தெளி விருத்துக் காய்ச்சியதையெல்லாம் ஒன்றாகச்சேர்த்து மறுபடியும் சலம்விட்டுக் கலக்கிக் காய்ச்சவேண்டியது. இப்படியே பத்து முறை காய்ச்சவேண்டியது, எ - று. (7)

---

## இரண்டாவது உப்புவின்மார்க்கம்

காய்ச்சுகின்ற முறைக்கெல்லாஞ் சுத்தஜலம்விட்டுக்
கலக்கியே தெளியவைத்துக் காய்ச்சுகாய்ச்சு
ஆச்சிந்தபூவதுதான் வெளுத்துப்போகும்
அப்புறத்தேவைத்த தினியரையக்கேளு
வாய்ச்சுதொரு கறியுப்பை வாரிக்கொண்டு
மானிடர்கள் கூட்டுமுப்பின் மார்க்கங்கேளு
பாய்ச்சிந்த படிசுத்தஜலத்தை விட்டுப்
பரிவாகத் தெளிவிருத்துப் பத்துமுறைகாய்ச்சே.

(போ - ரை.) ஒவ்வொரு முறை காய்ச்சும்போதும் சுத்த சலம் விட்டுக் கலக்கியே காய்ச்சவேண்டும். அப்படி காய்ச்சினுல் அந்த உப்பானது தன்னிடத்திலுள்ள எண்ணெய்நீங்கி வெளுத்துப்போகும். பிறகு அந்த உப்பை வேறேவைத்துக் கொள்ள வேண்டும். இதுவரைக்கும் ஒரு உப்பின் செய்பாகம் முடிந்தது. இனி இரண்டாவது உப்பின்பாகம் சொல்லுகிறேன் எப்படி என்ருல், உலகத்தில் மனிதர்கள் சோற்றுக்காக உபயோகப்படுத்தும் கறியுப்பைத் தேவையான அளவுக்குக்கொண்டு வந்து முன்னே சவட்டுப்புக்குச் சொன்னபடியே சுத்தஜலத்தை விட்டுக் கலக்கிக் கலக்கித் தெளிவிருத்து இருத்து முன்போலவே பத்துமுறை காய்ச்சி வேறே வைத்துக்கொள்ளவேண்டும், எ - று. (8)

---

## மூன்ருவது உப்பின்மார்க்கம்

முறையாக நிலவுப்பைச் சொல்லக்கேளு
 மூதண்டபிரமாவின் விந்தும்பின்னே
அறையான பூமியதி ஞதமாச்சு
 ஆதியுப்பு சிவமென்று மிதற்கேபேரு
மறைவாக வொளித்துவைத்தார் நூல்களெல்லாம்
 மார்க்கமெல்லாஞ் சொல்லுகிறேன் வரிசையாக
நிறையாகக்கல்லுப்பால் வளர்ந்ததப்பா
 நீற்றியேதின்பவர்க்குச் சுண்ணும்பாய்ச்சே.

(பொ - ரை.) இனிமேல் நிலத்திலுண்டாகும் ஒருவகையான உப்பின்மார்க்கத்தைச் சொல்லுகின்ருர். எப்படியென்ருல், அது பிரமாவின் விந்துவென்றும், பூமிநாதமென்றும் ஆதியுப்பென்றும் சிவமென்றும், பேர்களைப் பெறும், ஆனுல் இந்தப்பேர்களையும் இதின்மார்க்கங்களையும் சித்தர்களெல்லாம் தாங்கள் சொல்லிய நூல்களில் மறைத்துவிட்டார்கள். ஆனுல் நானே அதின் மார்க்கங்களை யெல்லாம் வரிசையாகச் சொல்லுகிறேன். ஆனுல் அந்த உப்பானது கல்லுப்பின் காரணத்தால் வளர்ந்ததாகும். இதை நீற்றித் தின்னும் கற்பசாதனையுள்ளவர்க்கு இது சுண்ணும்பாகும், எ-று.

சுண்ணமென்று லோகத்தோர் சுட்டுநீற்றிச்
சுகமாகதாம்பூலம் தின்பார்களே
சுண்ணும்புக்கல்லென்று மிதற்கேபேரு
சுத்தாரம் விபூதியும் மிதற்கேபேரு
எண்ணமுள்ள சுண்ணமப்பா காரச்சுண்ணம்
இயல்பான கல்லுப்பு சுண்ணமாச்சு
தண்ணியிலே போட்டவுடன் நீற்றிப்போச்சு
சவர்க்கார குழியாச்சு சார்ந்துபாரே.

(போ - ரை.) இந்த உலகத்தார்கள் இதைச் சுண்ணும்பாகக் கொண்டு நீற்றித் தாம்பூலத்தில் தடவித் தரித்துக்கொள்வார்கள். இதனுல் இதற்குச் சுண்ணும்புக்கல்லென்றும், வெண்மை நிறத்தோடு கூடியிருப்பதால் சுத்தவிபூதியென்றும் இதற்கு அநேக பேர்கள் இருக்கின்றன. இந்தச் சுண்ணும்பே காரத்தையுடைய சுண்ணமாகும். இதற்கே கல்லுப்புச் சுண்ணமென்று பேராகும். இந்தக்கல்லானது சலத்தில் போட்டவுடன் நீறிப்போகும் இந்த உப்பு இருந்து எடுக்கப்படும் இடமே சவர்க்காரகுழியாகும், இதை யெல்லாம் நீ நன்ருய்க் கவனித்துப் பார்ப்பாயாக. (10)

சார்வாகவிதைமறைத்தார் சித்தரெல்லாம்
சமுசயங்களில்லையப்பா வெளியாய்ச்சொன்னேன்
சீரானகல்லுதான் துய்யவெள்ளை
செகத்திலிந்தகல்லுதான் மெத்தவுண்டு
நீருனகல்லொன்று மாகாதப்பா
நிர்மலமாய் வெள்ளைக்கல் பிரமகற்பம்
ஆர்வாக வதையெடுத்தஃ தமுரிக்குள்ளே
அப்பனேயுவர்மண்ணைக் கரைத்துக்கொள்ளே.

(போ - ரை.) சகல சாஸ்திரங்களையும் உலகத்தார்களுக்காகச் சொல்லியருளிய சித்தர்களெல்லாம் தங்களால் சொல்லப்பட்ட நூல்களில் இந்த உப்பை மறைத்துப் பலவகையாகச் சொல்லி விட்டார்கள். நானே சந்தேக விபரீதங்களொன்று மில்லாமல்

வெளியாகச் சொல்லிவிட்டேன். இந்தக்கல்லானது ரொம்பவும் வெள்ளையாயிருக்கும் உலகத்தில் இது ரொம்பவும் கிடைக்கத்தக்க தாகும். வேறுவகை நிறமுண்டய கல்லுகள் உதவாவாகும். நல்ல வெள்ளையான கல்லுப்பே முன்சொன்ன பேர்களையும் பிரமகற்பம் என்னும் பேரையும் உடையதாகும். ஆகையால் அப்படிப்பட்ட கல்லை எடுத்துக்கொண்டுவந்து வைத்துக்கொண்டு அந்தக் கல்லுள்ள நிலத்திலிருக்கும் ஒரு வகையான உப்புமண்ணைச் சுத்தஜலம்விட்டுக் கரைத்துக்கொள்ளவேண்டும், எ - று. (11)

கொள்ளவே யதிலிந்தக் கல்லைப்போட்டுக்
குழுறவே காய்ச்சிவிடு கட்டிப்போகும்
வெள்ளையாய்ச் சுண்ணக்கல் கட்டிப்போச்சு
வேதாந்த மூர்த்தியென்று மிதற்கேபேரு
கல்லென்ற கல்லதனை யண்டநீரால்
கருவாக வரைத்ததனை வில்லையாக்கி
உள்ளபடி சொல்லுகிறேன் உலையிலூத
உத்தமனே சுண்ணும்பா முறைத்துமூதே.

(பொ - ரை.) அப்படி கரைத்த அந்தச்சலத்தில் மேலே முன்னர் கொண்டுவந்து வைத்திருக்கும் கல்லைப்போட்டு நன்றாய்ச் கலக்கி அடுப்பிலேற்றிக் காய்ச்சினால் அந்தக் கல்லானது கட்டிப் போகும். அப்படிகட்டுவதும் வெள்ளையாய்க்கட்டும், ஆகையால் அப்பொழுது வேதாந்தமூர்த்தியென்று இந்தக்கல்லுக்குப் பேராகும். அப்படி கட்டப்பட்டிருக்கின்ற உப்பை அண்டநீர் வார்த்தரைத்துப் பில்லையாகத்தட்டி மூசையில் வைத்து கொல்லனுடைய உலையில் வைத்து ஊதினால் நல்லவெண்மையான சுண்ணமாகும், எ - று. (12)

ஊதிடவே சுண்ணமுமாஞ் சலத்தைவாரு
ஓகோகோ நீர்வற்றும் நீறிப்போகும்
வாதிடவே பீங்கானில் வைத்துநீற்று
வளமான ஜலம்போலே நிறையவிட்டு

ஆதியாமண்டலமே வைத்தாயானல்
அதின்மேலே உப்புவந்துபடரும்பாரு
சோதியாமுப்பதனை வழித்துவாங்கிச்
சுகமாகப்பலமொன்று தூக்கிக்கொள்ளே.

(பேர் - ரை.) அப்படியான சுண்ணத்தில் சுத்தஜலம் விட்டால் அந்தநீரை அது இழுத்துக்கொண்டு நீற்றுப்போகும். பின்பு அதைப் பீங்கானில் எடுத்துவைத்து மேற்படி ஜலத்தை நிறைய விட்டு மண்டலம் வரைக்கும் வெயிலில் வைத்து வருவாயேயானல் அதின்மேல் ஒருவகையான உப்புப் படர்ந்துகொண்டேவரும். அப்படிப் படர்ந்துவந்த உப்பினை வழித்து ஒருபலம் நிறுத்துக்கொள்ள வேண்டும், எ - று. (13)

தூக்கியே வகையொன்று பலமொன்ருக
சுகமாகச் சூடனொரு பலமுங்கூட்டி
நோக்கியே அண்டநீர் விட்டேயாட்டு
நுணுக்கமாய் வில்லைசெய்தலதுலரவைத்து
தாக்கியே யுலர்ந்தபின்பு ஓடுமூடி
சாதகமாய்ச் சீலைமண்ணுஞ் சாத்திக்கொண்டு
பாக்கியே முழப்புடத்தில் நீறிப்போகும்
பண்பாக விதையெடுத்துப் பகரக்கேளே.

(பேர் - ரை.) இதில் நிறுத் தெடுத்ததுபோலவே முன்பு முடித்து வைத்திருக்கும் இரண்டு உப்பையும் தனித்தனி ஒவ்வொரு பலமாக எடுத்துக்கூடிய மூன்று பலமும், இத்துடன் ஆலாத்தி கர்ப்பூரம் ஒருபலமும் ஆக நான்குபலமும் ஒன்ருகக் கூட்டி சிற்றண்டம் வெண்கருவால் நான்குஜாமம் வரைக்கும் நன்ருயரைத்துப் பின்பு பில்லைசெய்யவேண்டிய அளவின்படி பில்லைசெய்து நன்ருய் வெயிலில் வைத்து உலர்த்தி உலர்ந்த பின்பு அகவில் வைத்து மேலுமொரு அகல்மூடி நாளுக்கொரு மண் சீலையாக ஏழுநாளைக்கு ஏழு மண்சீலைசெய்து முழப்புடம் போட வேண்டும். அப்படிப் போட்டான பின் விட்டெடுத்துப்பார்த்தால்

அது நீற்றிருக்கும். அந்த நீற்றை எடுத்து வைத்துக்கொண்டு வேறே நான் சொல்வதைக் கேட்பாயாக, எ - று. (14)

கேளப்பா வீரமொரு கழஞ்சுகூட்டிக்
கிருபையுள்ள புழுகதிலே கழஞ்சுகூட்டி
நாளப்பா பூரமொரு கழஞ்சுகூட்டி
நாட்டிலுள்ள சம்பழச்சாறிட்டு ஆட்டி
தாளப்பா வில்லைசெய்து ரவியிற்போடு
சாதகமாய் முழப்புடத்திற் போட்டுவாங்கு
வேளப்பா சுண்ணமது கடுங்காரமாச்சு
வெகுசருக்குப்பூநீறு குருவிதன்றே.

(பொ - ரை.) மேல் மருந்துடன் ஒன்றேகால் வராகனெடை வீரமும், ஒன்றேகால் வராகனெடை புழுகும், ஒன்றேகால் வராகனெடை பூரமும் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றினல் நான்கு சாமமரைத்துப் பில்லைதட்டி வெயிலில் வைத்து உலர்த்திப்பின்பு அந்தப் பில்லையை ஒரு அகலில் வைத்து மேலே அகல்மூடிச் சீலை மண்செய்து முழப்புடம் போட்டாறவிட் டெடுத்துப் பார்த்தால் அது மிகவும் காரத்தோடுகூடிய சுண்ணமாகும். இதுவே பூநீற்றால் செய்யப்படும் குருமருந்தாகும், எ - று. (15)

---

## இன்னருக்கு நூல் உதவாதெனல்

குருவேதோ முறையேதோ வென்பார் மாண்பர்
கூறியதோர் நூல்காணர் குருட்டுவாதி
தருவான முப்பூவைப் பாரார்மாண்பர்
தாரணியில் மனிதர்களை மயக்குவார்பார்
உருவான கல்லுப்பை யறியமாட்டார்
உலுத்தருக்கு வாதமஃ துண்டோவில்லை
தெருவோடே அலைகிறதோர் நாயைப்போல
சென்மித்த கசடருக்கு வாதமேதோ.

(போ - ரை.) உலகத்தில் மனிதர்கள் குருவேதோவென்றும், அதின்முறை எங்கிருக்கிறதோவென்றும், சொல்லுவார்களேயொழிய அந்தக் குருவைச் சொல்லுகின்ற சாஸ்திரத்தை அறியார், அவர்களெல்லாம் குருட்டுவாதிகளென்றே சொல்லப்படுவார்கள். ஆனால் அந்த முப்புவாகிய குருமருந்தின் வழி தெரியாதவரா யிருந்தாலும் உலகத்தில் மனிதர்களை வஞ்சகம் செய்வதில் திறமுடையவர்களாகமாத்திரம் இருப்பார்கள். இவர்களெல்லாம் தெருவில் திரிந்துகொண்டே யிருக்கும் நாயைப்போன்றவராவார்கள், எ - று. (16)

ஏதென்றுபோகாமற் சொல்லக்கேளு
எடுத்ததொரு துறைக்கெல்லா மெளிதேயாகும்
வாதமென்ற பேர்களெல்லா மயங்கிப்போக
வயித்தியத்தின் திறவுகோல் மார்மேலாணி
தூதென்ற செந்தூரம் வைப்புக்கெல்லாம்
திடியான பூநீறு சொல்லிப்போட்டேன்
கானென்ற வுபதேசம் குருத்தான்சொல்வார்
கைகண்ட குருவாச்சு கருதிப்பாரே.

(போ - ரை.) இனி இரசவாதத்துக்காக எடுத்துக்கொண்ட மார்க்கங்களுக்கெல்லாம் இம்மருந்தொன்று முடித்துக்கொண்டால் அந்த வாதமானது மிகவும் இலகுவாக முடிவுபெறும். ஆனால் இதை யறியாதவாதிகளெல்லாம் இது வயித்தியத்திற்கே யாகுமென்று சொல்லி மயங்குவார்கள். நானோ செந்தூரம் சரக்கு வைப்பு இவைகளுக்கும் இரசவாதத்திற்குமேல் இந்தப் பூநீற்று வேலையை ரொம்பவும் கருணையாகச் சொல்லிவிட்டேன். இது குருவினால் தெரிந்துகொள்வதாக விருந்தால் (நான் சொல்லுவதுடன் பிரயாசமும் அதிகமாகும்.) ஆகையால் இந்தச் சாஸ்திரமே குருவாக நினைத்துப் பார்த்துக்கொள்வாயாக, எ - று. (17)

—

## இந்நூல்விட்டால் ஒன்றுமாகாதெனல்

பாரப்பா விதிலேயோர் கழஞ்சுவாங்கி
 பாய்ச்சியே லோகத்தை நீற்றிப்போடு
வாரப்பா ஒருநூற்றின் ஐம்பதுக்குள்
 வைத்ததொரு மர்மந்தான் முப்பூவாலே
சீரப்பா குருவைவிட்டுச் செந்தூரத்தால்
 சிவக்காது எடையில்லை ஜெயமாகாதே
ஊரப்பாவிக்கருவை யொளிக்கவில்லை
 ஒருகோடி நூலுக்குள் ஒளித்தார்சித்தர்.

(பொ - ரை.) மேலே முடித்துள்ள முப்புவில் ஒன்றேகால் வராகனெடை எடுத்து எப்படிப்பட்ட லோகத்தையும் நீற்றிவிட லாகும். முன்னே நூற்றைம்பது பாடல்களுக்குள்ளே சொல்லிய நீற்றினமும் இந்த முப்புவினுலே ஆகக்கூடியதாகும். இந்த மருந்தை விட்டுவிட்டு செந்தூரஞ் செய்தால் அது சிவப்புமாகாது. எடையும் சரியாக விருக்கமாட்டாது. சரியான மருந்தாக முடியவு மாட்டாது. ஆகையால் சித்தர்களெல்லாம் தாங்கள் சொல்லிய நூல்களில் இதை மறைத்துச் சொல்லி யிருக்கின்றனர். நானோ அப்படி மறைக்கவில்லை, எ - று. (18)

சித்தாகவேண்டுமென்றால் இந்நூல்பாரு
 ஜெயமாகுங் குருவறிய விந்நூல்பாரு
முத்தான முப்பூவுக் கிந்நூல்பாரு
 மூதண்ட வைத்தியத்துக் கிந்நூல்பாரு
பற்றாத வாதத்துக் கிந்நூல்பாரு
 பாரிலுள்ளோர்க் கிந்நூலைப் பகரவேண்டாம்
ஒத்தாடும் சிஷனுக்கு ஒளிக்கவேண்டாம்
 உலகத்து மானிடருக் குரைக்கலாகா.

(பொ - ரை.) ஓ மாணுக்கனென்றும் நல்ல உறுதித் திறமை பூண்டவனே ! நான் சொல்வதைக் கேட்பாயாக: என்னவென்றால்,

நீ சித்தனாக இஷ்டப்பட்டாலும், குருமருந்தைத் தெரிந்துகொள்ள நினைத்தாலும், முப்பு மார்க்கத்தில் பழகவிரும்பினாலும், வயித்தியஞ் செய்ய நினைத்தாலும், வாதஞ்செய்ய நினைத்தாலும் இந்த நூலை நன்றாய்ப் படித்தாராய்ந்தறிந்து இதின்படி செய்வாயாக. அல்லாமலும் இந்த உலகத்திலுள்ளவர்க்கு இந்த நூலைக் காட்டவேண்டாம். நல்ல சிஷ்யபரம்பரை தவறாத உன்னைப்போன்ற மாணாக்கனுக்குக் காட்டாமல் ஒளிக்கவேண்டாம், எ - று. (19)

ஆகாத வழியினைத்தான் அடுக்கலாகா
  ஆருக்கு மிந்நூலைக் கொடுக்கவேண்டாம்
பாகான முப்பூவை விடுக்கலாகா
  பாவிகட்கூஞ் செந்தூரம் பகரலாகா
போகாத கன்மத்தை நிவர்த்திசெய்து
  பூதலத்தி வைத்தியஞ்செய் புண்ணியமாகும்
வாகாகச் செய்தாலே சித்தியாகும்
  வல்லமையாய்ப் பொய்சித்துச் செய்யலாமோ.

(போ - ரை.) வேறுமுடியாத மருந்துகளை யெல்லாம் முடிப்பதற்குத் தலையிட்டுக்கொள்ளவேண்டாம். எப்பொழுதும் என்ன மருந்து செய்தாலும் அதில் இந்த முப்பைச் சேர்க்காமல் விட்டுவிடவேண்டாம். மோசஞ்செய்து மருந்தை அடித்துக்கொண்டு போகும் தன்மையுள்ள பாவிகளுக்குச் செந்தூரம் செய்யும்விதத்தைச் சொல்லவேண்டாம். ஆகையால் நீயே உன்னுடைய கர்மத்தையெல்லாம் நீக்கிக்கொண்டு வயித்தியஞ் செய்வாயானால் புண்ணியசாலியாவாய் அதைவிட்டு வீண்மார்க்கத்தில் சென்று அதில் அலைந்து திரியாமல் மிகவும் பராக்கிரமத்தோடு செய்தாயானால் சகல சித்திகளுமுண்டாகும், எ - று. (20)

---

## உருக்கினத்தை மறைத்தமை

ஆமிந்த வகையெல்லாந் தெரியச்சொன்னோம்
  அப்பனே உருக்கினத்தைச் சொல்லவில்லை

நாமிந்த வகையெல்லாஞ் சொன்னேமப்பா
நரசென்ம மானதெல்லா மதிகசென்மம்
ஓமிந்த ஜீவஜெந்தைச் சிவனார்நீற்றி
உலகத்தி லுண்டாக்கித் திருஷ்டிச் செய்தார்
வாமிந்தச் செந்துக்கள் நடக்கையாலே
வந்ததடா நோய்களென்ற வறுமைதானே.

(போ - ரை.) இப்படிப்பட்ட விதங்களெல்லாம் நாம் தெரியும்படி சொல்லிவிட்டோம் ஆனால் இதுவரைக்கும் உருக்கினத்தை மாத்திரம் சொன்னதில்லை. ஆகையால் இந்த முதற்காரண மருந்தைக்கொண்டே சிவபெருமானும் உலகத்தினிடத்தில் உயர்ந்த மானிடப்பிறப்பை உண்டாக்கினர். அப்படி யுண்டாக்கிய தொழில் நடக்கையினாலே நோய்களெல்லாம் அந்த மனுஷர்களுக்கு வந்து மூண்டுக்கொண்டன, எ-று. (21)

---

## பிணிவரலாறு

தானென்ற நோய்களினாற் செத்துப்போனால்
தாரணியில் மனிதருண்டோ தாயேசொல்வார்
வாவென்ற சிவனைக்கேள் மைந்தாவென்று
வாயிசொல்ல மாதாவே நீயேசொல்லு
தேனென்ற மனோன்மணியாள் சிவனைக்கேட்டு
செகத்திலே மனிதரைநீ சிருட்டிசெய்தால்
நோயென்று வியாதிகளை யுடனேவிட்டு
நுணுக்கமற்று மரணத்தா லுய்வதேதோ.

(போ - ரை.) அப்படி நோய்கள் வந்து மூண்டுக்கொள்வதினால் பிறகு உலகத்தில் மனிதர்கள் இருக்கமாட்டார்களே தாயே! என்று சத்தியைக் கேட்கச் சத்தியானவள் சிவபெருமானைக் கேளென்று சொல்ல அதற்கு நீயே அச்சிவபெருமானைக் கேட்டுச் சொல்ல வேண்டுமென்று மறுத்தும் கேட்டுக்கொண்டதற்கு அவள் சிவபெருமானை நோக்கி உலகத்தில் மனிதர்களைச் சிருட்

டித்து உடனே நோய்களையும் விட்டுக்கொல்வது எற்றுக்கோ? எ - று. (22)

உய்வதினால் வெகுபாவ மென்றுபோற்றி
உமையவள்தா னவர்பாதம் பணிந்துகேட்க
செய்வதென்ன அவரவர்கள் கன்மத்தாலே
தீவினைக ளாலெடுத்த சடலத்தோர்கள்
நைவினையா லுய்யாம லடியேனுக்கு
நல்லவாக்கு தந்தருளி நல்கவேணு
மைவிழிசே ருமையாளே உலகத்தோர்க்கு
வைத்தியரே மருந்தொன்று வகைசொல்வோமே.

(பொ - ரை.) அப்படி கொன்று அதினால் இறந்து மீண்டும் ஜெனிப்பது ரொம்பவும் பாவமல்லவா என்று சொல்லிச் சிவ பெருமானுடைய திருவடிகளுக்கு நமஸ்காரஞ்செய்து கேட்டாள். அதற்கு அவர் அதுவெல்லாம் நம்மால் ஆகத்தக்கவையல்ல. அவைகளை நாமும் அப்படி செய்யவில்லை. ஆனால் எப்படி நடக்கிறதென்று கேட்பாயானால் சொல்லுகிறேன் கேள். அவரவர்கள் கர்மத்தால் அப்படியெல்லாம் நடக்கின்றனவென்று சொல்லியருளினார். அதற்கு உமாதேவியார் உலகத்தினிடத்தில் அந்த நோய்களையெல்லாம் நிவர்த்தி செய்யும்பொருட்டு சில மருந்துகளை எனக்கு உபதேசித்தாள், எ - று. (23)

வகையான மூலிகையுங் காரசாரம்
வளமான உபரசமும் பாஷாணங்கள்
தகையான நவரத்தினம் அஷ்டலோகம்
தனிச்சீவ செந்துமுதல் தரணியோர்கள்
வகையான நோய்கட்கு மருந்தீதென்று
மகத்தான மேகமெல்லா மாண்டுபோக
தகையாமற் றுயெனக்கு உபதேசித்தாள்
சாற்றினேன் வயித்திய மிரண்டுலக்ஷங்காணே.

(போ - ரை.) அந்த மருந்துகளாவன: மூலிகையும், காரசாரமும், உபரசமும், பாஷாணங்களும், நவரத்தினமும், அஷ்டலோகமும் ஆகும்; இப்படி இவைகளையெல்லாம் உபதேசித்து இந்த மருந்துகள் சீவஜெந்துமுதல் மனிதர் வரைக்கும் வருகின்ற நோய்களுக்கெல்லாம் இவையே மருந்தாகும். ஆகையால் இவைகளைக்கொண்டு அவரவர்களுக்கு வரும் ரோகங்களை யெல்லாம் ஒழிப்பாயாகவென்று எனக்குச் சத்தியானவள் கட்டளையிட்டருள அந்தக் கட்டளையைத் தலைமேற்கொண்டு வயித்தியத்தில் இரண்டு லக்ஷம் செய்யுள்கள் அடங்கிய சாஸ்திரங்களை வெளியிட்டருளினேன், எ-று. (24)

---

## நூலின் தொகை

காணப்பா பத்துஆயிரமுஞ் சொன்னேன்
　கனமான ஆயிரத்து ஐந்நூறுந்தான்
பூணப்பா அறுநூறு பிருநூரோடு
　புகழாக மூன்றுபத்து மைந்துமாகத்
தோணப்பா கன்மசூஸ்திர முன்னூறு
　துறையான வைம்பதுக்குள் சுருக்கிப்போட்டேன்
விணப்பா மற்றதெல்லா மிந்நூல்விட்டால்
　வேறான முப்பூவின் வீதிதானே.

(போ - ரை.) அதின் பிறகு பத்தாயிரத்தில் ஒன்றும், ஆயிரத்தைந்நூற்றில் ஒன்றும், அறுநூற்றில் ஒன்றும், இருநூற்றில் ஒன்றும், மூன்றில் ஒன்றும், பத்தில் ஒன்றும், ஐந்தில் ஒன்றும், கர்மசூத்திரமாக முந்நூற்றில் ஒன்றும், ஆகச்சொல்லிக் கடைசியில் அவைகளையெல்லாம் நன்றாய்ச் சுருக்கி இந்த நூலான ஐம்பதாகச் சொல்லி விட்டேன். இந்த நூலைவிட்டு மற்ற நூல்களெல்லாம் வீணாய்ப்போகும் இது உப்புவின் வழியைப்போதிப்பதில் சிறந்தாகும், எ - று. (25)

---

## காந்தவுருக்கனம்

வீதியாய்ச் சொல்லுகிறே னுருக்கினத்தை
வெட்டவெளி யாவுந்தன் விபரமாக
ஆதியாம் முப்பூவிற் காரங்கூட்டி
அழகான காந்தத்தை யெடைக்கெடையேகூட்டி
பூதியாய் முலைப்பாலால் விட்டுஆட்டி
புகழான குகைக்குள்ளே வைத்துமூடி
ஊதிதா னக்குகையி லுருக்குநீற்று
ஒகோகோ ஒருமணியா யுருகிப்போமே.

(போ - ரை.) இனிமேல் இந்த முப்புவைக்கொண்டு முடித்துக்கொள்ளக்கூடிய உருக்கினத்தை வெளிப்படையாகச் சொல்லுகிறேன் எப்படியென்றால் மேலேசொல்லி முடித்த முப்புவில் எடைக்கெடை வெங்காரம் சேர்த்து அதின் எடைக்கெடை காந்தத்தைச் சேர்த்து நன்றாய் முலைப்பால் கொண்டரைத்து உலர்த்தி மூசைக்குள் வைத்து கொல்லனுலையில் வைத்து உருக்கினால் அந்தக் காந்தமானது உருகி ஒரேமணியாகக் கட்டிப்போகும், எ-று.

---

## இரும்பு அப்பிரகம்

போமென்ற விரும்பினது பொடியைவாங்கி
புகழாக அந்தெடைக்குக் குருவைப்போட்டு
தாமப்பா முலைப்பாலால் சாமமாட்டி
சாதகமாய்க் குகைக்குள்ளே வைத்துமூடி
நாமென்ற வக்குகையி லுருக்கியாட்டி
நலமான ஒருமணியாய் நிற்குமபாரு
வாமென்ற அப்பிரக நவநீதத்தை
மாட்டியே யெடைக்கெடை முன்மருந்துகூட்டே.

(போ - ரை.) இனி அதைவிட்டு அரப்பொடி வேண்டுமான அளவு வாங்கிக்கொண்டு வந்து அதின் எடைக்கு முன் குருமருந்தைப் போட்டு முலைப்பாலால் அரைத்து

மூசைக்குள் வைத்து மேல்மூடி, கொல்லனுடைய உலைக்களத்தில் வைத்து உருக்கினால் ஒரே மணியாய் உருகிநிற்கும், அதைவிட்டு அப்பிரகத்தை வெண்ணெயாகச்செய்து அதின் எடைக்குக் குரு மருந்தைக் கூட்டவேண்டும், எ - று. (27)

## கருடப்பச்சைக்கல்

கூட்டியே மூலைப்பாலால் சாமமாட்டி
 குகைக்குள்ளே வாரியிட்டு மூடிக்கொண்டு
நாட்டியதோர் குகையிலிட் டுருக்கித்திரு
 நலமாக ஒருமணியாம் நாட்டிப்பாரு
மூட்டோடே வாங்கிவைத்துப் பின்புகேளு
 முனையான கருடப்பச்சைக் கல்லு வாங்கி
ஆட்டியே குழிக்கல்லிற் பொடித்துக்கொண்டு
 அழகாக வந்தெடைக்கு மருந்துகூட்டே.

(பொ - ரை.) அப்படி அந்த மருந்தைச் சேர்த்து ஒருசாமம் வரைக்கும் மூலைப்பால் கொண்டரைத்து மூசைக்குள்ளிட்டு மூடி உலையில் வைத்து உருக்கிப்பார்த்தால் அந்த அப்பிரகமானது நன்றாயுருகி ஒரேமணியாய் நிற்கும் அதை அந்த மூசையிலேயே வைத்துவிட்டுப் பிறகு கருடப்பச்சைக் கல்வத்திலிட்டுப் பொடித்து வைத்து அதின் எடைக்கு முன்மருந்து சேர்க்கவேண்டும், எ - று. (28)

## கல் நார்

மருந்தென்ன குருவதனைக் கூட்டிக்கொண்டு
 வளமான மூலைப்பாலி லாட்டியாட்டு
குருந்தென்ன குகையிலிட்டு சில்லுபோட்டு
 கூருக வூதிடவே மணியுமாகும்
விருந்தென்ன கல்நாரை வாங்கியேதான்
 விருதான குருக்கூட்டி விரைந்துஆட்டி

அருந்துகின்ற பாலாலே யாட்டித்திரு
அப்பனே யுலையில்வைத்து மூட்டியூதே.

(போ - ரை.) அந்தக் குருமருந்தைச் சேர்த்துக் கல்வத்தி விட்டு முலைப்பாலாலரைத்து மூசையிவிட்டு மேலே மூடிசெய்து உலையில் வைத்து ஊதினல் அந்தக்கல்லானது உருகி மணியாய் நிற்கும் இதைவிட்டு, ஏதாயினும் ஒருவகைக் கல்நாரை வாங்கிக் கொண்டு வந்து அந்த எடைக்குக் குருமருந்தைக்கூட்டி முலைப் பாலால் நன்ருயரைத்து மூசையிலிட்டுப்பின் மேல்மூடி உலையில் வைத்து ஊதவேண்டும், எ - று. (29)

---

## சாஸ்திரவேதி உப்பு

மூட்டியே யுருக்கிடவே மணியுமாகும்
மூதண்ட சகஸ்திரமாம் வேதிகேளு
தாட்டியே யெடைக்கெடைதான் குருவைச்சேர்த்து
சாதகமாய் முலைப்பாலா லாட்டித்திரு
ஆட்டியே குகையில்வைத்து மாட்டியூது
அப்பனே ஒருமணியாய் நிற்கும்பாரு
தேட்டியே டங்கணத்தைச் சேர்த்துக்கொண்டு
திடமாக வெடைக்கெடைதான் குருவைக்கூட்டே.

(போ - ரை.) அப்படி யூதினல் அந்தக் கல்நாரானது நன்ரு யுருகி ஒரேமணியாய் நிற்கும். பின்பு அதைவிட்டு சாத்திரவேதி யென்னுஞ் சரக்கைக் கொண்டுவந்து அந்த எடைக்குக் குருமருந்தைச்சேர்த்து முலைப்பாலால் அரைத்து மூசையிவிட்டு மேல்மூடி உலையில் ஊதினல் அது உருகி ஒரேமணியா யிருக்கும். இனி இதை வேறே எடுத்து வைத்துக்கொண்டு, உப்பைக் கொண்டு வந்து அந்த எடைக்குக் குருமருந்தைச் சேர்க்கவேண்டும், எ - று.

குருவதினைக் கூட்டியென்ன பொடித்துக்கொண்டு
கூசாமல் முலைப்பாலையிட்டு ஆட்டு

திருவானக் குகையில்வைத்து மூடிக்கொண்டு
திறமாக யூதிவிட்டுத் திரளுமட்டும்
பருவமுடன் வகைபார்த்துக் குகைக்குளிட்டுப்
பாங்காக மூன்றுமுறை குலிக்கியூது
மருவாகமணியாக வாங்கிக்கொண்டு
வளமான அண்டத்தோல் வாங்கிடாயே.

(பொ - ரை.) அந்தக் குருமருந்தைச் சேர்த்துப் பொடி செய்து முலைப்பால் விட்டரைத்து மூசையிலிட்டு மேல்மூடிச் சீலைசெய்து உலைக்களத்தில் வைத்து அது நன்ருய் உருகித் திரண்டு வரும்வரைக்கும் ஊதவேண்டும். இப்படி மூன்றுதாம் பார்த்துப் பார்த்து ஊதவேண்டும். அப்படி யூதினுல் அது உருகி மணியாய் நிற்கும். பின்பு அதை வேறே வைத்துக்கொண்டு பின்பு கோழிமுட்டைதோல் வாங்கிக்கொண்டுவரவேண்டும், எ-று.

---

## அண்டத்தோல்

வாங்கியே சவ்வுதனைத் தள்ளிப்போட்டு
மருந்தென்ன குருவுதன்னை யெடைக்கெடையே
வாங்கியே முலைப்பாலை விட்டுஆட்டி [கூட்டி
வளமாகக் குகையில்வைத்து வாங்கியூது
ஏங்கியே மணியாக விறங்கிப்போகும்
இன்னமொரு சேதியுண்டலை தியம்பக்கேளு
தூங்கியே திரியாதே சொல்லக்கேளு
துடியான சங்கதனைப் பொடியாய்த்தூக்கே.

(பொ - ரை.) அந்தத் தோலைக் கொண்டுவந்து]உள்ளிருக்கும் சவ்வுத்தோலை நீக்கிப்போட்டுப் பின்பு நிறுத்துப்பார்த்து அந்த எடைக்குக் குருமருந்தைச் சேர்த்து கல்வத்திலிட்டு முலைப்பாலால் நன்ருயரைத்து மூசையிலிட்டு மேல்மூடிக் கொல்லனுடைய உலைக் களத்தில் வைத்து நன்ருய் வாங்கி வாங்கி யூதினுல் அந்தத் தோலானது உருகி ஒரேமணியாய் நிற்கும். பிறகு அதை ஆற

வைத்து எடுத்துக்கொண்டு சங்கு கொண்டுவந்து பொடியாய்ச் செய்து நிறுக்கவேண்டும், எ - று. (32)

## கர்ப்பூர சிலாசத்து

தூக்கியே யெடைக்கெடைதான் குருவைக்கூட்டி
துலங்கவே மூலைப்பாலை விட்டுஆட்டி
ஆக்கியே குகையில்வைத்து உருக்கியாட்டு
அப்பனே யொருமணியா யாகும்பாரு
நோக்கியே சிலாசத்து சொல்லக்கேளு
நுணிக்கியே யெடைக்கெடைதான் குருவைப்போ [ட்டு
தாக்கியே மூலைப்பாலை விட்டுஆட்டி
சாதகமாய்க் குகையில்வைத்து சார்வாயூதே.

(போ - ரை.) அப்படி நிறுத்த அந்த எடையின் பிரகாரமே முன்முடித்து வைத்திருக்கும் குருமருந்தைச் சேர்த்துக் கல்வத்தி விட்டுப் பொடித்து மூலைப்பாலால் நன்றாயரைத்து மூசையிலிட்டு மேல்மூடிக் கொல்லனது உலையில் வைத்து ஊதினால் அது ஒரே மணியாய் உருகிநிற்கும், அதையெடுத்து வைத்துக்கொண்டு நல்ல கர்ப்பூரசிலாசத்து போதுமானவளவு வாங்கிக்கொண்டுவந்து அந்த எடைக்குக் குருகூட்டி மூலைப்பாலா லரைத்து மூசையிலிட்டு உலையில் வைத்து நன்றாய் ஊதவேண்டும், எ - று. (33)

## நவரத்தினம், அஸ்தி

சார்வாக வூதவொரு மணியாய்நிற்கும்
தருவானநவரத்தினஞ் சொல்லக்கேளு
ஆறுன வொன்பலைதயும் வெவ்வேறாக
அந்தந்த வெடைக்கிடைதான் குருவைக்கூட்டி
போராகவளர்த்ததனை குகையில்வைத்து
பெருமைபடவூதிடவே மணியுமாகும்
கார்வாகமனிதருட அஸ்திதன்னைக்
கலந்ததனைப்பொடியாக்கி குருவெடைதான்காணே

(போ - ரை.) அப்படி யூதினுல் அது உருகி ஒரே மணியாய் நிற்கும் அதைவிட்டு நவரத்தினங்களையும் கொண்டுவந்து ஒவ்வொன்றையும் வெவ்வேருக நிறுத்தெடுத்து அந்த ஒன்பதிக்குஞ் சேர்ந்த மொத்த எடைக்குக் குருமருந்தைச் சேர்த்து முலேப்பாலால் அரைத்து மூசையில் வைத்து மேல்மூடி உலேயில்வைத்து ஊதினுல் அது உருகி மணியாய் நிற்கும். அதைவிட்டு மனிதருடைய எலும்பு பச்சையாகக் கொண்டுவந்து பொடியாக்கி அந்த எடைக்குக் குருமருந்தைச் சேர்க்கவேண்டும், எ - று. (34)

---

## மான்கொம்பு

காணந்த வெடைக்கெடைதான் முலேப்பால்விட்டு
கலந்தரைத்துக் குகைகயில்வைத்து காடாயூது
பூணந்தத் தாய்க்குகையி லுருக்கித்திரு
புசழாக வொருமணியாய் நிற்கும்பாரு
தோணந்தக் கலேயினது கொம்பைவாங்கி
சுகமாகசிவியதை தூக்கிக்கொண்டு
ஊணந்த வெடைக்கிடைதான் குருவைவிட்டு
உறைப்பாக முலேப்பாலா லாட்டிவாங்கே.

(போ - ரை) பின்னர் அப்படி சேர்க்கப்பட்ட அந்த மருந்தை முலேப்பாலாலரைத்து மூசையிலிட்டு மேல்மூடி நன்ருய் வாங்கி வாங்கி யூதினுல் அது உருகி ஒரே மணியாய் நிற்கும். அதையெடுத்து வேறே வைத்துக்கொண்டு, மான்கொம்பு போதுமான அளவுக்கு வாங்கிக்கொண்டுவந்து அதைச் சீவித் தூளாக்கி அந்த எடைக்குக் குருமருந்தைக் கூட்டிக் கல்வத்திலிட்டு முலேப்பாலாலரைக்கவேண்டும், எ - று. (35)

---

## ஆமையோடு

வாங்கியே குகையில்வைத்து உருக்கித்திரு
வளமாக குகையினுள்ளே கண்விட்டாடும்

பாங்கியே ஆமையுடல் தன்னைவாங்கிப்
பாங்காக விடித்ததனை நொறுக்கிக்கொண்டு
தாங்கியே குருவதனைச் சமனுய்சேர்த்து
சார்வாக முலைப்பாலா லதனையாட்டி
நீங்கியே குகையிலிட்டு உருக்கியூது
நேராக வுருக்கினத்தின் நீதிகேளே.

(போ - ரை.) அரைத்து வழித்து மூசையிலிட்டு மேலோடு மூடிச் சிலைமண்செய்து கொல்லன் உலையில்வைத் துருக்கினுல் கண்விட்டாடும் சமயம்பார்த்து எடுத்து ஆறவைத்து மூசையை உடைத்து எடுத்து வைத்துக்கொள்ளவும், பின் ஆமையோட்டைக் கொண்டுவந்து இடித்துப் பொடியாக்கி நிறுத்து இதற்குச் சரியாகக் குருமருந்தைக் கூட்டிக் கல்வத்திலிட்டு முலைப்பாலாலரைத்து வழித்து மூசையிலிட்டு மேலோடுமூடிச் சீலைமண்செய்து உலையில் வைத்து நன்ருய் வாங்கிவாங்கி யூதி நன்ருய் உருகி மணியானபின் இறக்கி எடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது, எ - று. (36)

---

## உருக்கின செந்தூரம்

நீதியாயுருக்கினத்தின் மணியையெல்லாம்
நிசமாகவெடைக் கெடைதான் கெந்திகூட்டி
சேதியா யுடைத்ததனைப் பொடியாய்ப்பண்ணி
திட்டமா யரைத்திடுவாய் நாலுஜாமம்
ஆதியாய் வில்லைசெய்து வைத்துக்கொள்ளு
அழகான பழச்சாற்ரு லாட்டித்திரு
வாதியாய் வந்தவனை வெளியில்வைத்து
வரிசையாய் மூன்று நாளாட்டிப்போடே.

(போ - ரை.) மேற்படி இரசவாதத்திற்குக் காரணமாயுள்ள இதுவரைக்கும் உருக்கித் தீர்த்த மணிகளையெல்லாம் தனித்தனி உடைத்துப் பொடியாக்கி நிறுத்துப் பார்த்து ஒவ்வொன்று இருக்கும் எடைக்குச் சரியாக நெல்லிக்காய்க் கந்தகத்தை நிறுத்துச்

சேர்த்து நல்ல எலுமிச்சம்பழச் சாற்றால் நாளொன்றுக்கு நாலு சாமமாக மூன்றுநாள் விடாமற்படி நல்ல பலசாலியானவன் அரைக்கவேண்டும். அப்படியரைக்கும்போது யாதொரு இரசவாதி யையும் சேர்க்கவேண்டாம், எ - று. (37)

போட்டதொரு வில்லதனை யோட்டில்வைத்து
புகழாக மேலோடு கொண்டுமூடி
நாட்டமாய் சீலெசெய்து கெஜபுடத்தில்
நன்றாகச்செந்தூர முருக்கம்பூப்போல்
பூட்டவே செப்புகனில் பதனஞ்செய்து
புதுமையாய் தீரும்நோய் புகலக்கேளு
நீட்டவே யெந்தெந்தநோய்கள் குஷ்டம்
நினைவான அநுபானமறிந்து செய்யே.

(போ - ரை.) அரைப்புத் தீர்ந்தவுடன் நான்காநாள் காலே யில் பில்லேதட்டி வெயிலில்வைத்து நன்றாயுலர்த்தி, உலர்ந்தபின் அந்தப்பில்லேயை அகலில்வைத்து மேலும் அகல்மூடிச் சீலேமண் வலுவாகச்செய்து நூறு வறுட்டியில் புடம்போட வேண்டியது. அப்படிப்போட்ட புடமானது தானுகவே நன்றாக யெரிந்து குளிர்ந்தவுடன் புடத்தைப் பிரித்துப் பார்த்தால் அந்த மருந்தா னது முருக்கம்பூவைப்போல செவந்து செந்தூரமா யிருக்கும் அதையெடுத்துப் பத்திரப்படுத்திக்கொண்டு, பின்பு மனுஷர்கள் தேகத்திலுண்டாகிவரும் குஷ்டம் முதலாகச் சொல்லப்பட்ட எந்த நோய்க்கும் கொடுக்கவேண்டிய அநுபானத்தை யறிந்து நல்ல மாணுக்கத் தன்மைபூண்ட நீ கொடுத்துவரக் கடவாய், எ-று. (38)

---

## அநுபான விபரங்கள்

செய்யவே யிரும்பதனைத் தேனிற்கொள்ள
செகத்திலுள்ள பாண்டுவகை யெல்லாந்தீரும்
மையவே காந்தத்தை தேனிற்கொள்ள
மகத்தான வாயுவோடு பாண்டுபோகும்

உய்யவே யிப்பாகஞ் ச்ஞ்சீவிதன்னில்
உகந்தக்கால் நீரிழிவு மோடிப்போகும்
மையவே கருடனைத்தான் தேனிற்கொள்ள
நாடாது கண்ரோகம் நாடிப்பாரே.

(போ - ரை) இரும்பு உருக்கிச் செந்தூரத்தைத் தேனிலனு பானஞ்செய்து தின்றால் விஷபாண்டு முதலிய சகல பாண்டுகளுந் தீர்ந்துவிடும். காந்த செந்தூரத்தைத் தேனிலனுபானஞ் செய்து தின்றால், வாயுக்களும் பாண்டுகளும் போகும். இந்தச் செந்தூரத்தை அமிர்தசர்க்கரையி லனுபானஞ்செய்து தின்றால் நீரிழிவு போகும். கருடப்பச்சைக்கல் செந்தூரத்தைத் தேனிலனுபானித்துத் தின்றால் கண்களில் உண்டாகும் காசங்களெல்லாம் நிற்காமல் போய்விடும், எ - று. (39)

பாருநீ கன்னுரைத் தேனிற்கொள்ள
பாரிலுள்ள ரோகமது சேத்துமந்தீரும்
தேறீவே சாஸ்திரவேதி பாலிற்கொள்ள
தேகத்திலுள்ளநோய் சிதறிப்போகும்
வாருநீடங்கணத்தை யிஞ்சிச்சாற்றில்
மருகிடவே வாதசுரஞ் சன்னிப்போகும்
சீரான அண்டத்தை தூதுவேளையிற்கொள்ள
க்ஷயமோடுகாச மிளைப்புதீருமீளை.

(போ - ரை.) கல்நாரால் செய்யப்பட்ட செந்தூரத்தைத் தேனிலனுபானஞ் செய்து தின்றுவந்தால் சேத்துமத்திலுண்டாகும் ரோய்களெல்லாம் தீர்ந்துபோகும். சாஸ்திர வேதியால் செய்யப்பட்ட செந்தூரத்தை முலைப்பாலி லனுபானஞ்செய்து தின்றுவந்தால் வாதசுரமும், சந்நிகளும் தீரும். முட்டைத் தோல் செந்தூரத்தை தூதுவேளைச் சாற்றி லனுபானஞ் செய்து தின்றுவந்தால் க்ஷயம், காசம், ஈளை முதலியவைகள் தீரும், எ - று. (40)

ஈளைபோஞ் சங்குசுண்ணம் பனைவெல்லத்தில்
இட்டக்கால் வாயுவெல்லா மிறந்துபோகும்

வாளாகும் பித்தமெல்லா மாண்டுபோகும்
மைந்தனே யநுபான மறிந்துசெய்தால்
காளையாய் சலாசத்துச் செந்தூரத்தைக்
கடுக்காயிற் றின்றிடவே மகோதரங்கள்
பேளையாம் பெருவயிறு நீராம்பல்போம்
பெரிதான ரத்தினத்தின் பெருமைகேளே.

(பொ - ரை.) சங்கினல் செய்யப்பட்ட செந்தூரத்தைப் பனை வெல்லத்தில் அனுபானஞ் செய்து தின்று வந்தால் வாயுவுக்களும், பித்தங்களும், பாண்டும் நிற்காமல் போய் விடும், ஆனல் என்னுடைய மாணுக்கனே நீ நல்ல அனுபானங் களை அறிந்து வயித்தியஞ் செய்யவேண்டியது. உன்னுடைய கடமையாகும். ஆனல் சிலாசத்துச் செந்தூரத்தைக் கடுக்காய்த் தூளில் அனுபானஞ்செய்து தின்றுவந்தால் மகோதரங்கள், பெரு வயிறு, நீராம்பல், ஆகிய கொடிய ரோகங்கள் தீர்ந்துபோகும். இனி ரத்தினத்திற்கு அனுபானஞ் சொல்லுகிறேன், எ - று. (41)

பெருமையுள்ள மாணிக்கஞ் சாதிக்காயிற்கொள்ள
பெரும்பாடு யெலும்புருக்கி பிரிந்துபோகும்
அருமையென்ற பச்சைதனை கற்கண்டிற்கொள்ள
அஸ்திசுரம் வெட்டைமுத லகன்றுபோகும்
தருமையென்ற வயிரத்தை சீனியிற் கொள்ள
சலக்கழிச்சல் நீரிழிவு சாராதோடும்
ஒருமையென்ற வைடூரியம் பாலிற்கொள்ள
உள்வறட்சிகள் ரோக மோடிப்போமே.

(பொ - ரை.) மாணிக்கத்தாற் செய்யப்பட்ட செந்தூரத்தைச் சாதிக்காய்த்தூளில் அனுபானஞ்செய்து தின்றுவந்தால் பெரும் பாடும், எலும்புருக்கியும் தீர்ந்து போகும். பச்சைக்கல் செந்தூரத் தைக் கற்கண்டில் அநுபானஞ்செய்து தின்றுவந்தால் அஸ்திசுரம் சூடு, முதலானவைகள் நீங்கிப்போகும், வயிரத்தால் செய்யப்பட்ட செந்தூரத்தை சீனிசர்க்கரையில் அநுபானஞ்செய்து தின்றுவர்

தால், சலக்கழிச்சலும், நீரிழிவும் நீங்கிப்போகும். வைடூரியத்தால் செய்யப்பட்ட செந்தூரத்தை முலைப்பாலில் அனுபானஞ் செய்து தின்றுவந்தால் வறட்சி முதலிய ரோகங்கள் நீங்கிப் போகும், எ - று. (42)

போகுமே கோமேதகம் நெய்யிற்கொள்ள
புகழான விளையொடு க்ஷயரோகம்போம்
வாகுசேர் கலைக்கொம்பைத் தேனிற்கொள்ள
மைந்தனே கண்துலங்கு மயக்கந்தீரும்
ஆகுமிந்த நீலத்தை திரிகடுகிற்கொள்ள
ஆச்சரியங் குஷ்டமெல்லா மகன்றுபோகும்
மோகமா முத்ததினைத் தின்பாயானல்
மூர்க்கமாம் பவளத்தின் முறையைக்கேளே.

(போ - ரை.) கோமேதகத்தினுல் செய்யப்பட்டிருக்கும் செந்தூரத்தை நெய்யில் அநுபானஞ்செய்து தின்றுவந்தால் ஈளை க்ஷயம் முதலிய ரோகங்கள் நீங்கிப்போகும்.) மான்கொம்பினுல் செய்யப்பட்ட செந்தூரத்தை தேனில் அநுபானஞ்செய்து தின்றுவந்தால் கண்ணனது நன்ருய் விளங்கும். மயக்கம் முதலிய பிரமைகள் நீங்கிப்போகும். நீலக்கல்லால் செய்யப்பட்ட செந்தூரத்தைத் திரிகடுகு சூரணத்தில் அனுபானஞ்செய்து தின்றுவந்தால் குஷ்ட ரோகங்களெல்லாம் நீங்கிப்போகும். முத்தினுற் செய்யப்பட்ட செந்தூரத்தை நெய்யில் அநுபானஞ் செய்து தின்றுவந்வால் (மேகரோகங்களெல்லாம் நீங்கிப்போகும். இனிப் பவழ பற்பம் தின்கின்ற முறையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக, எ - று. (43)

முறையான பவளத்தை முலைப்பாலிற்கொள்ள
முக்கியமாந் தேகமது வலுத்துப்போகும்
மறையான பித்தமெல்லா மாய்ந்துபோகும
மகத்தான மேகமெல்லா மாண்டுபோகும்
துரையான வப்பிரகஞ் சீனியிற்கொள்ள
துன்பஞ்செய்ய திரேகந் தொலைந்துபோகும்

துறையான கஸ்தூரி தின்பாயானல்
சுரஞ்சன்னி யகன்றுபோகும் சுகமிதாமே.

(போ - ரை.) அப்படியே செய்யப்பட்ட அனுபானஞ்செய்து, பவளச் செந்தூரத்தை முலைப்பாலில் தின்றுவந்தால் தேகமானது மிகவும் பலப்பட்டுப்போகும். பித்தங்களெல்லாம் ஓடிப்போகும் மேகங்களெல்லாம் நீங்கிப்போகும். அப்பிரகத்தால் செய்யப்பட்ட செந்தூரத்தை சீனிசர்க்கரையில் அநுபானஞ்செய்து தின்றுவந்தால் வருத்தத்தைக் கொடுக்கின்ற அநேக நோய்கள் தீர்ந்து போகும். கஸ்தூரியைத்தின்றுவந்தால் சுரம், ஜன்னி இவைகள் நீங்கிப்போகும், எ-று. (44)

சுகமான ஆமைசத்து தின்பாயானல்
சோர்வில்லா சன்னியொடு சூலைதீரும்
மகத்தான வகைக்கெல்லா மனுபானங்கள்
அறிந்துநீ கொண்டாக்கா லகலும்நோய்கள்
தவமான செந்தூர மினங்கள்தோறும்
தான்குருக்காற் களஞ்சிதனைத் தாக்கிக்கொண்டு
முகமான குழிக்கல்வி லொக்கவிட்டு
முலைப்பாலா லாட்டிவிடு சாமமொன்றே.

(போ - ரை.) ஆமையோட்டால் செய்யப்பட்ட செந்தூரத்தைத் தின்றுகொண்டுவந்தால் சந்நியும், சூலையும், தீர்ந்துவிடும். ஒவ்வொன்றையும் நல்ல அநுபானங்களறிந்து சாப்பிட்டுக்கொண்டு வந்தால் நோய்களெல்லாம் நிற்காமற் போய்விடும். ஆனல் ஒவ்வொரு செந்தூரத்திற்கும் கால் கழஞ்சு குருமருந்தை கூட்டிக் கல்வத்திலிட்டு முலைப்பாலால் ஒருஜாமம் அரைக்கவேண்டும், எ - று. (45)

ஒன்ருன சாமமது அரைத்துவாங்கி
உருட்டிவிடு குன்றியெடை உலர்த்திக்கொண்டு
நன்ருகவேயரைத்து இஞ்சிச்சாற்றில்
நலமாகக் கொண்டிடவே சன்னிதீரும்

பண்டான வலியைந்தும் பயந்துபோகும்
படுபாவியான சுரங் கண்ணிற் காணு
உண்டான சேதியெல்லாஞ் சொல்லிப்போட்டேன்
ஒழிக்கறியோ மொழிக்கவில்லை யுலகத்தோர்க்கே.

(போ - ரை.) அப்படி ஒரு சாமம் அரைத்து வழித்துருட்டி ஒரு குன்றிமணியளவு மாத்திரைதிரட்டி யுலர்த்திக்கொண்டு இஞ்சிச்சாற்றி லனுபானஞ் செய்து ஒரு மாத்திரை சாப்பிட்டால் சன்னிதீரும். ஐந்துவகையான வலிகள் நீங்கும். சுரங்களெல்லாம் கண்ணிலகப்படாமல் ஓடிப்போகும். இப்படியெல்லாம் நடப்பது குருமருந்தின் செய்கையேயாகும் இப்படி இருப்பதை யெல்லாம் நான் ஒருவனே உலகத்தார்களுக்கு வெளிப்படையாகச் சொன்னேனேயொழிய வேறொருவரும் இப்படிச் சொல்லவில்லை, எ - று. ()

உலகத்தோர் பிழைக்கவென்று கருவைச்சொன்னேன்
உறப்பாக வயித்தியத்தை யூணிச்சொன்னேன்
நிலைகெட்ட மாந்தருக்கே சொன்னேனில்லை
நிலைதவறு மனிதர்கட்கு நிகழ்த்தினேன்யான்
வலைகட்கு மீன்பிடிக்குந் தன்மைபோல
வையகத்தில் நோய்களுக்கு வலைபிதாகும்
சிலையுமொத்த தேகமடா மனிதர்தேகம்
செய்கையறி யாமலிவர் செத்தார்பாரே.

(போ - ரை.) இந்த உலகத்திலுள்ள நல்ல அறிவுடையோர்களுக்கே இதின் கருவையும் வயித்தியத்தின் முறைமையையும் சொன்னேனேயொழிய வேறே புத்திசாலிக ளல்லாதவர்களுக்குச் சொல்லவில்லை. மீன்களெல்லாம் வலையிலகப்பட்டுக் கொள்வது போல நோய்களெல்லாம் இந்த நூலில் சொல்லப்பட்ட மருந்துகளான வலைகளிலகப்பட்டுக்கொள்ளும். இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஆனால் இந்த மார்க்கத்தை தெரிந்துகொள்ளாமலே உலகத்திலுள்ள ஜனங்களில் அநேகர் இறந்துவிட்டார்கள், எ - று. (47)

பாருநீ பலநூல்கள் நன்றுப்பார்த்து
    பகர்ந்ததொரு நாடியெல்லாம் பகருவாயே
சேருநீகுணங்குறிகள் நன்றுப்பார்த்து
    செயமான மருந்தினது குணபாகங்கள்
சேருநீசாதகமுஞ் சாத்திரமுங்கண்டு
    செயமானநோயினுட குணமுஞ்செய்கை
வாருநீகன்மத்தை நிவர்த்திசெய்து
    வளமான முப்பூவின் மார்க்கஞ்செய்யே.

(போ - ரை.) மாணுக்கனுகிய நீ பல சாஸ்திரங்களையும் நன்றாய் ஆராய்ந்து நாடிகளையும், குணத்தையும், குறியையும், மருந்தின் குணங்களையும் நன்றாய்த் தெரிந்துகொண்டு உன்னுடைய கர்மத்தை நிவர்த்திசெய்து அதன்பிறகு முப்புவைச் செய்யவேண்டும், எ - று. (48)

செய்யவே குருவதனை முடிக்கவேண்டும்
    செந்தூரமான தெல்லாஞ் செய்யவேண்டும்
நையவே பிணியெல்லாந் தீர்க்கவேண்டும்
    நாட்டிலுள்ள பேர்களெல்லாம் வணங்கவேண்டும்
துய்யவே தியானங்க ளுரைக்கவேண்டும்
    துறையான பூசைமுறை யறியவேண்டும்
பையவே கோபத்தை நீக்கவேண்டும்
    பண்டிதரே யிந்தமுறை பகருங்காலே.

(போ - ரை.) நான் சொன்னபடியே குருமருந்தை முடித்துப் பின்பு அதைக்கொண்டு செந்தூரங்களை முடித்துப் பின்பு அவைகளைக்கொண்டு நோய்களை யெல்லாம் தீர்த்துப் பின்பு உலகத்திலுள்ளவர்களெல்லாம் உன்னை வணங்கும்படி செய்துகொண்டு, பூசை, செபம், தபம், தியானம் முதலியவைகளை முடித்துக் கோபத்தை நீக்கி யிந்தமுறையை நன்றாகக் கவனிக்க வேண்டும் எ - று. (49)

காலான வயித்தியத்தை யுறுதியாகக்
கைமுறைகள் தப்பாமற் கருவைச்செய்தால்
பாலான நிறமுடைய பிரமனுவான்
பண்டிதரில் தன்வந்திரி பகவானுவான்
சேலான மச்சமுனி யெண்ணூறும் பார்த்தால்
சிந்தையிலே களங்கமறச் சித்தனுவான்
நலமான மணிபெற்று பிரமன்சொன்ன
நலமுடைய முனிமொழிந்த முப்பூமுற்றே.

(போ - ரை.) அதன்பின்னர் வயித்தியத்தொழிலை நல்ல கடைப்பிடியாகப் பிடித்துத் தவறுமல் செய்து வருவாயானுல் இவனே பிரமதேவனுவானென்று மற்றோர்கள் சொல்லும்படியாவாய். அன்றியும், சிலபேரால் இவன் வயித்தியத்தில் தன்வந்திரி பகவானென்றுசொல்லவும்அறிவாய். இதுவல்லாமல் எவனொருவன் மச்சமுனிவரால் சொல்லப்பட்டிருக்கின்ற எண்ணூறு பாடல்களைக் கொண்ட சாஸ்திரத்தைப் பார்க்கின்றுனே, அவன் உலகத்தில் சித்தப் புருஷனுவான். இது ஆதியில் பிரமன் சொல்ல பின்னர் அகஸ்தியனுகிய நான் சொன்னேன் இதுவே முப்புவைச் சொல்லும் நூலாகும். இது முடிவுபெற்றது, எ - று.

இதில் இரசவாதமென்று முடிவுபெறும விருப்பதால் வயித்தியமேயென்று சிலர் சொல்லுகின்றனர். நல்ல இரசவாதிகளோ வென்றுல் இதின்பிரகாரம் முப்புமுடித்து வேதை மார்க்கப்படி வேதிக்கின்றுர்கள் என்று சற்றே பாரம்பரையாகக் கேட்டிருப்பதால் இதனை இங்கே எழுதலாயிற்று. ஆகையால் இரசவாதிகள் இந்தக் குருமருந்தை முடித்து வேதைமார்க்கப்படி செய்துகொள்வார்கள். (50)

முற்றிற்று

---

# அகஸ்திய முனிவர்

## திருவாய் மலர்ந்தருளியவை

---

### வேறுமிசிரவேதை

ஆதியென்ற பூரணமாங் கண்டத்துள்ளே
  ஆத்தாளைத் தொழுதுநின்று ஐங்கரனைப்போற்றி
சோதியென்ற அறுநூறு பெருநூல்தன்னைச்
  சூத்திரத்தா னறுபதுக்குட் சுருக்கிவைத்தேன்
சோதியென்ற கருக்குருவும் வெளியாகத்
  திறந்திட்டேன் கைபாக மருந்தின்பாகம்
வீதியென்ற கெவுனத்தி னேட்டம்போல
  விளைந்தமணி யின்னூல்தான் சொல்லக்கேளே.

(போ - ரை.) முதற் பொருளாகின்ற சர்வ வியாபக பரிபூரணன் எழுந்தருளி யிருக்கின்ற கண்ட ஸ்தானமாகிய விசுத்தியில், யாவரையும் பெற்றெடுத்தவளான பராசத்தியை நமஸ்காரஞ்செய்து பிறகு ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக் கடவுளைத் துதிசெய்து; நான் அறுநூறு பாடல்களாகப் பாடிய பெரிய அரிய நூலைச் சுருக்கி அறுபது பாடல்கள் கொண்ட சுருக்கமாய்ப் பாடினேன். ஆனால், இந்தநூலில் சொல்லப்பட்ட விஷயங்கள் எவையென்றால்: கருவைக்கொண்டு செய்யுந் தொழில்களும் இரசவாதத்தின் கைபாகங்களும், மருந்தின் அளவையும் கவனமார்க்கத்தின் விசேஷமுமேயாம் ஆயின் அவைகளும், யாதொரு இரத்தினத்தைக் கண்டவர்களை அந்த ரத்தினமானது தன்வயப்படுத்திக் கொள்வதுபோல, இந்நூல் தன்னைப் படித்தவர்களைத் தன்வயப் படுத்திக்கொள்ளும், எ - று. (1)

கேளப்பா குருசெயநீர் வகைகயைக்கேளு
  கேசரம்போல் மறைத்துவைத்தார் சித்தரெல்லாம்

வாளப்பா மறைப்பென்ன வென்றுகேட்டால்
மகத்தான சவுக்கார மென்றேசொன்னர்
வேளப்பா வெரித்தசிவன் பாதந்தன்னை
வெளியாகக் கருமறைப்பைச் சொல்லவேண்டாம்
நாளப்பா நொடிக்குள்ளே செய்யும் வித்தை
நன்ருக ஊசிநீர் படிதான்வாங்கே.

(போ - ரை.) எந்த மருந்துகளையும் முடித்து நீற்றகுரு ஜெயநீரை சொல்லுகின்றேன். அதை மாணுக்கனென்னும் உறுதித்திறம் பூண்டவனே ! நீ கேட்பாயாக: அதின் விவரம் எப்படி யென்ருல் ஆனுல், இந்த ஜெயநீரை முக்காலத்துச் சித்தர்களெல்லாம் வேறு மறைபெயர் கொடுத்து வெளிவிடாமல் மறைத்து வைத்தார்கள். அதாவது எந்தப் பெயரால் மறைத்தார்கள் என்ருலோ ! சவர்க்காரம் என்கிற பெயரால் மறைத்துவைத்தார்கள். ஆனுல் மாணுக்கனுகிய நீயும் சிவனுடைய திருவடிகளில் சத்தியப்படி அந்த மறைப்பை வெளிவிடவேண்டாம் நான் இதை உனக்குக் கெட்டியாகச் சொன்னேன். இனி செய்பாகம் வருமாறு: ஊசிநீர் என்னும் மறைப்புப்பெயர் பெற்றிருக்கின்ற பனிச்சலத்தை ஒரு படி கொண்டுவந்து வைத்துக்கொள்ளவேண்டும், எ - று. (2)

வாங்கப்பா யிவருக்குக் கல்லுச்சுண்ணம்
வாகான வெடியுப்பு படிகாற்சேரு
காங்கப்பா ரோகநீர் படிதானென்று
சவ்விரம் நவாச்சாரஞ் சீனந்தானும்
பாங்கப்பா முக்களஞ்சு மொன்ருய்ச்சேர்த்து
பதருமல் கலக்கியல்லோ தெளியவைத்து
வாங்கப்பா தெளிவினுள்ளே மூலப்புளிதானிட்டு
வரிசையுடன் தெளிவிருத்துக் காய்ச்சு காச்சே.

(போ - ரை.) மேலேசொன்ன ஒருபடி பனிஜலத்தில் சுண்ணக்கல் கால்படியும், ஐஞ்சாங்காய்ச்சல் வெடியுப்பு கால்படியும் போட்டு மூன்றுநாள் ஊறவைத்து நான்காவதுநாள் காலையில்,

அயத்தைச் சம்பந்தப்படுத்திய திராவகத்தை ஒருபடி அளவுக்கு ஷெ பனிஜலத்திற் கலந்து மறுபடியும் மூன்றுநாள் ஊறவைத்து ஆக ஏழுநாள் சென்றபின்பு எட்டாவது நாள் காலையில் வீரம் மூன்றே முக்கால் வராகனெடையும், நவாச்சாரம் மூன்றே முக்கால் வராகனெடையும், படிகாரம் மூன்றேமுக்கால் வராக னெடையும் ஷெ ஜலத்தில் போட்டு மறுபடியும் மூன்றுநாள் ஊறவைத்து பன்னிரண்டாவது நாள் காலையில் எடுத்து நன்ருய்க்கலக்கி சற்று தெளியவைத்து பிறகு தெளிந்த ஜலத்தை வேருெரு பாத்திரத்தில் இறுத்துக்கொண்டு அப்படி இறுக்கப்பட்ட ஜலத்தில் நல்லகாலத்தில் முறைப்படி யெடுத்த பூநீர் அரைப்படி போட்டு மூன்றுநாள் ஊறவைத்து பிறகு தெளிவிறுத்துக்கொள்ள வேண்டும். (3)

காய்ச்சியதோர் குழம்பினுள்ளே சிறுநீர்விட்டு
கைமுறையாய் மூன்றுதிங்கள் காய்ச்சிக்கொண்டு
காய்ச்சியதோர் துறைகளெல்லா மின்னீரிட்டால்
படுமுன்னே சாக்கெல்லா மாளுமாளும்
காய்ச்சியதோர் குருசெயநீர் மேருவில்விட்டுக்
களங்கமறப் பூசைசெய்து சாபந்தீர்த்துப்
பாய்ச்சியதோர் குருசெயநீ ராட்டங்கேளு
பரப்பிலே விடுகாதே சொல்வேன்கேளே.

(போ - ரை) மேலே தெளிய விறுத்து வைத்துக்கொண்ட ஜலத்தை மண்பாத்திரத்தில் விட்டு அடுப்பேற்றி கமலாக்கினியாக எட்டுச் சாமம்வரைக்கும் எரித்து அந்த உப்புநீர் குழம்பாகிற தருணத்தில் ஒருபடி வாதமுறைக்கு தகுந்த பருவத்தையுடைய பிள்ளைகளின் சிறுநீர் ஒருபடிவிட்டு பிறகு ஒரு நாளைக்கு ஒருநாழிகை அளவாக மூன்றுமாதம் வரைக்கும் லகுவாக எரித்து வைத்துக் கொள்ளவேண்டும். இப்படி எரித்த நீருக்கு சுத்தகங்கையென்றும், சவர்க்காரமென்றும், குருஜெயநீர் என்றும், புளித்த ஜலமென்றும், பிண்டநீரென்றும், பழச்சாரென்றும், பரிபாஷைப் பெயர்களால் அநேகபெரியோர்களும் ரசவாதத்தொழிலில் தேர்ந்த

வர்களும், நூல்முறையாகவும், வசனமுறையாகவும், சொல்லியிருக்கின்றனர். ஆனாலும் மேலே சொன்ன சுத்தகங்கையானது, எந்தச் சரக்குகளில் படுகின்றதோ அந்தச் சரக்குகள் அந்தக்ஷணமே மாளும். (அதாவது நீறிப்போகும்) அப்படிப்பட்ட சுத்தகங்கையை ஒரு பாத்திரத்தில் விட்டு பதனம்பண்ணி வாதமுறைப்படி பூசித்து சாபம் நிவர்த்திசெய்து வைத்துக்கொள்ள வேண்டும். இதை வெளிப்படுத்தல் கூடாது. ஆனால் இதையாடும் விவரத்தை இனிமேல் சொல்லுகின்றேன். (4)

---

## கரியுப்புவேதை

கேளடா மணிமணியா யுப்பைவாங்கிக்
கெடியான குருச்செயநீர் விட்டுஆட்டி
நாளடா காய்ந்ததென்று லோட்டில்வைத்து
நன்றாகக் குக்குடந்தான் போடுபோடு
தேளடா கொட்டுதல்போ லுப்புச்சுண்ணஞ்
ஜெயமாச்சு சரக்கையெல்லாங் கொள்ளுமப்பா
மாளடா ஜெயநீர் தன்னை வைத்தாயானால்
மகத்தான வித்தையதி லாடும்பாரே.

(போ - ரை.) மாணாக்கனென்னும் உறுதித் திறம்பூண்ட ரசவாதியே! இனி, கரியுப்புச்சுண்ணத்தால் செய்து முடிக்கின்ற வேதையைச் சொல்லுகிறேன். நீ கேட்பாயாக! அது எப்படியென்றால் கட்டிக்கட்டியான கரியுப்பை வேண்டிய அளவுக்கு வாங்கி அதை மேலே முடித்து வைத்திருக்கின்ற சுத்தகெங்கை குருஜெயநீர்விட்டு நான்கு ஜாமம் அரைத்து பில்லைதட்டி ஒரு நாளெல்லாம் உலரும்படி செய்து மறுநாள் நாலுக்கு நாலங்குலமுள்ள அகலின்மேல் பில்லையை வைத்து மேலே அகல்மூடி நாளுக்கொரு சீலையாக ஏழு நாளைக்கு ஏழுசீலைமண் செய்து நன்றாய் உலர்த்தி பத்து வறட்டியில் அக்கினித்திட்டம் தவறாதபடி புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் காலையில் ஷை புடத்தைப் பிரித்து சீலையை அவிழ்த்துப் பார்த்தால் உள்ளிருக்கும்

பில்லையானது சுண்ணமாயிருக்கும். இந்தச் சுண்ணமானது சாக்கு களைக் கொல்லும் திறமையில் மிகவும் சிறந்தது. ஆனாலும் முன் ஜெயநீருடைய சகாயமில்லாவிட்டால் ஒரு சாக்கையும் கொல்லுந் திறமை இதற்கு இராது. எப்படிப்பட்ட வித்தையையும் இதி லேயே ஆடலாம், எ - று.

அளவு :—ஒரு பலம் உப்புவுக்கு ஆறு பலம் ஜெயநீர் பில்லை இரண்டங்குலத்திற் கிரண்டங்குலம் வட்டமும் ஒருநூல் கனமு முள்ளது. இங்கே கரியுப்பு என்றது சோற்றுப்பு அல்ல கறுப்பு உப்பு ஆகும். (5)

பாரப்பா கரியுப்புச் சுண்ணம்நாலு
பரிவான வீரமொன்று லிங்கமொன்று
சேரப்பா கந்தியொன்று சூதமேழு
திறமான குருஜெயநீர்விட்டு ஆட்டி
வாரப்பா வெயில்முகத்திற் காய்ந்தபின்பு
வறுத்திடுவாய் மூன்றுநாழிகை தான்மட்டும்
கூரப்பா வென்னாலே சொல்லப்போமோ
கோடிவித்தை நாழிகைக்குள் கூடுந்தானே.

(பொ - ரை.) மேலே முடித்துத் தீர்த்து வைத்திருக்கின்ற கரியுப்புச் சுண்ணம் நான்கு வராகனெடையும், வீரம் ஒரு வராக னெடையும், லிங்கம் ஒரு வராகனெடையும், நெல்லிக்காய்கந்தகம் ஒரு வராகனெடையும், இரசம் ஏழு வராகனெடையும் நிறுத்து எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து மேலே முடித்துவைத்திருக் கின்ற சுத்தகங்கை குருஜெயநீரைவிட்டு நான்கு ஜாமமரைத்து அப்படியே வெயிலில் உலர்த்தி தூளாக்கி காய்ந்தபிறகு அந்தத் தூளை ஒரு மண் பாத்திரத்திலிட்டு அடுப்பேற்றி மூன்று நாழிகை வரைக்கும் வறுத்து வேறு பாத்திரத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆனால் இது செய்கின்ற அரிய வித்தையை என்னால் சொல்லமுடியாது. ஆயினும் அப்படிப்பட்ட வித்தைகளை ஒரு நாழிகைக்குள் செய்துமுடிக்கும் என்பது நிச்சயம், எ-று. (6)

---

## கந்தகக் களங்குவேதை

தானென்ற கந்தகத்தின் களங்குகேளு
தாய்சொன்னுள் கந்தகத்தை வாங்கிக்கொண்டு
வானென்ற அயக்கரண்டி தனிலுருக்கி
மைந்தனே மிளகு தக்காளிச்சாற்றில்
மானென்ற சூட்சந்தான் சாய்த்தாயானல்
மகத்தான் களங்கமப்பா கோடிவித்தை
கோனென்ற களங்கொன்று ரெட்டிப்புசூதங்
கூட்டுவது வீரமொன்று சாரமொன்றே.

(போ-ரை.) இனி கந்தகத்தால் செய்யப்படுங் களங்கிலிருந்து செய்கின்ற வேதையைச் சொல்லுகின்றேன் நீ கேட்பாயாக! அந்த வேதையை எனக்குப் பார்வதி தேவியானவள் உபதேசித்தாள் அது எப்படியென்றால் வேண்டுமான அளவு நெல்லிக்காய் கந்தகத்தை வாங்கி, இரும்புக் கரண்டியில் போட்டு நன்றாயுருக்கி மிளகு தக்காளிச்செடி சமூலம் கொண்டுவந்து அதை யிடித்துப் பிழிந்து அந்தச் சாற்றில் மேலேயுருக்கின கந்தகத்தைச் சாய்த்தால் அந்தக் கந்தகமானது களங்காகும் அந்தக் களங்கால் அநேக வித்தை செய்யக்கூடும். அப்படி முடித்த களங்கு ஒரு எடையும், இரசம் இரண்டு எடையும், வீரம் ஒரு எடையும், நவாச்சாரம் ஒரு எடையும் சேர்க்கவேண்டும், எ - று. (7)

---

## செம்புசுத்தி வேதை

ஒன்றாகக் குருஜெயநீர்விட்டு ஆட்டி
யுலர்ந்தபின்பு வறுத்திடு நாழிகைதானறு
நன்றாகக் கந்தகந்தானறு மட்டும்
நாவுண்டோ சொல்வதற்கு என்னாற்கூடா
குன்றாத செம்புசுத்தி தன்னைக்கேளு
கூறறிந்து அவுரியிலே கொடித்தக்காளி

மன்ருகப் பொரிகாரம் வீரத்தோடு
மடையனுந்தான் சேர்த்தரைத்துப் பூசுபூசே.

(போ - ரை.) இவைகளை யெல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து முன்னே முடித்து வைத்திருக்கின்ற சத்தகங்கை குருஜெயநீரைக் கொண்டு நான்கு நாழிகை வரைக்கும் அரைத்துப் பில்லைதட்டி வெயிலில் வைத்து லகுபுடம் தவருதபடி போட்டு வேறே வைத்துக்கொள்ளவும். ஆனுல் இதின் பெருமையை யென்னுற்சொல்ல முடியாது. இனி செம்பு சத்திசெய்யும் விதம் வருமாறு: நீலி யிலையையும் கொடித்தக்காளி யிலையையும், படிகாரம், வீரம், துத்தம் இவைகளைச் சேர்த்து அரைத்து அந்தச் செம்புக்குப் பூச வேண்டும், எ - று. (8)

பூசிமண் சட்டிவைத்துக் குக்குடந்தான்போடு
பொன்னுகும் செம்பூறல் பறந்துபோச்சு
ஆகியே காரமோடு வீரந்துத்தம்
அழகான நாயுருவி நெரிஞ்சில்கூட்டிப்
பூசியே குக்குடத்தில் செம்பினூறல்போச்சு
புனிதமாம் பறியென்ற வஸ்துவாச்சு
சாஸ்வதமாம் ஜெயநீரை பதனம்பண்ணு
தளரவே வேதைக்கும் புகழுண்டாமே.

(போ - ரை.) அப்படி பூசிய செம்பை ஒரு மண்சட்டியில் வைத்து மேல்சட்டிமூடிச் சீலைமண் மூன்றுசெய்து பத்து வருட்டியில் புடம்போடவும். போட்டபின்பு ஒருநாள் ஆறவிட்டு எடுத்துப் பார்த்தால், செம்பு சத்தியான விதத்தைப் பார்த்தால் ஒருவகையான பொன்போன்ற நிறத்தை யடைந்திருக்கும். இனி வேறுவித செம்புசுத்தி சொல்லுகின்றேன் கேட்பாயாக! அது என்னவென்ருல் வெங்காரம், வீரம், துத்தம், நாயுருவி, சிறுநெருஞ்சில் ஆகிய இவைகளைக் கூட்டி முன் சத்தகங்கை குருஜெயநீரா லரைத்துச் செம்பில்பூசி அகலில்வைத்து மேலும் அகல்மூடிச் சீலைமண்செய்து பத்து வருட்டியில் புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள்

எடுத்துப் பார்த்தால் செம்பினது ஊறல்போய்ச் சுத்தியாகும் அப்பொழுது பொன் என்கிற பேரையுடையதாகும். ஆகையால் இந்தச் செயநீரின் தன்மையையுணர்ந்து அதைப் பதனம்செய்து வைத்துக் கொள்ளவேண்டும், எ - று. (9)

---

## லிங்கவேதை

ஆமப்பா லிங்கவித்தை சொல்லக்கேளு
ஆச்சரிய மதுவாகும் காரியஞ்சூதம்
தாமப்பா வெங்கார மொன்றுய்க்கூட்டி
சாதகமாய்க் குருஜெயநீர் விட்டுஆட்டி
ஓமப்பாகவசித்து மண்ணுஞ்செய்து
உப்பில்வைத்துச் சாமமொன்று எரித்தாயானல்
வாமப்பா லிங்கமது கட்டிப்போச்சு
வாங்கப்பா நாலுலிங்கஞ் சூதங்கேளே.

(போ - ரை.) இனி இலிங்கத்தால் செய்யப்படும் வேதையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக! அது எப்படி யென்றால் காரீயம், இரசம், வெங்காரம் இவைகளைச் சம எடையாக வெடுத்து முன்னே முடித்து வைத்திருக்கின்ற சுத்தகங்கை குருஜெயநீரால் நான்கு சாமமரைத்துப் பில்லைதட்டி வெயிலில் ஒரு நாளெல்லாம் காயவைத்து மறுநாள் மேற்படி பில்லையை ஒரு அகலில்வைத்து, மேலும் ஒரு அகல்மூடிச் சீலைமண்செய்து வெயிலிலுலர்த்தி, ஒரு வாயகன்ற சட்டிக்குள் நிறைய உப்பைப்போட்டு நடுவே அந்த அகலைவைத்து மேல்மூடாமல் ஒருசாமம் வரைக்கும் சிறுக எரித்தால் அந்த லிங்கமானது கட்டிப்போகும். அப்படி கட்டிய இலிங்கம் நான்கு எடையும் இரசம் இரண்டு எடையும், எ-று. (10)

கேளப்பா பாதிரசங் கந்தியொன்று
செடியான வீரமொன்று காரமொன்று
கேளப்பா செயநீர்தான் விட்டுஆட்டி
வெயில்முகத்திற் காய்ந்தபின் லிங்கத்தாட்டு

நீளப்பா சத்தசாகரம் போல்வித்தை
நிமைக்குமுன்னே செய்விக்கும் வேதைப்போக்கு
நாளப்பாசொல்லாதே கருக்குவழி சூட்சம்
நன்ருன மருந்தெல்லாம் வாய்ப்புத்தானே.

(போ - ரை.) இரசம் அரை எடையும் கந்தகம் ஒரு எடையும், எடுத்து ஒன்ருய்ச் சேர்த்து முன்முடித்து வைத்திருக்கின்ற சுத்தகங்கை ஒரு குரு ஜெயநீராலரைத்துப் பில்லைதட்டி வெயிலில் காயவைத்து ஒருநாள் காய்ந்த பின்பு அதை லகுபுடம்போட்டு வாங்கி (செம்பு நான்கு, வெள்ளி இரண்டும்) கூட்டி உருக்கி அது உருகி நிற்குஞ் சமயத்தில் இந்த மருந்தில் ஒன்றுகொடுக்க எட்டரைமாற்றுக் கொடுக்கும்படியான பொன்னுகும். இது மகா சூட்சமான வித்தையென்று அறிந்து கொள்ளக்கடவாய், எ-று.

---

## துத்தநாகவேதை

தானன நாகவித்தை சொல்லக்கேளு
தனிநாக மொன்றுடனே சூதம்ரெட்டி
மானன அரிதாரம் துருசுவெள்ளை
மைந்தனே வெங்காரம் வீரங்கூட்டிக்
கோனன் செயநீரை விட்டுஆட்டி
கொடியரவி முகத்தில்வைத்து உருக்கும்போது
பானன நாகவித்தை யாடுமாடும்
பண்பாகப் புலத்தியனே கண்டுகொள்ளே.

(போ - ரை.) இனிச் சிறுகண் துத்தநாகத்தால் செய்யப்படும் வேதை வருமாறு எப்படியென்ருல்! சிறுகண் துத்தநாகம் ஒரு எடையும், இரசம் இரண்டு எடையும், அரிதாரம் ஒரு எடையும், மயில்துத்தம் ஒரு எடையும், வெள்ளைப்பாஷாணம் ஒரு எடையும், வெங்காரம் ஒரு எடையும், வீரம் ஒரு எடையும் சேர்த்து நான்கு நாழிகை வரைக்கும் முன்னே முடித்து வைத்திருக்கின்ற ஜெயநீராலரைத்து ஒரு மூசைக்குள் போட்டுக் கொல்லனது

உலைக் களத்தில் வைத்து நன்றாயூதினால் இது நாகக்களங்காகும். இதை யெடுத்து வேதை செய்யவேண்டிய முறைப்படி செய்துக் கொள்ளலாம். ஆகையால் நல்ல அறிவுபூண்டுள்ளவனான புலத்தியனே நீ தெரிந்து கொள்ளக்கடவாய், எ - று. (12)

---

## கருவங்கவேதை

கண்டுசொல்ல ஆர்வல்லர் சித்தரன்றிக்
காசினியி லுள்ளவர்க ளார்தான்காண்பார்
விண்டுசொல்லக் காரீயத் தாட்டைக்கேளு
வெடியுப்பு அரிதாரம் வீரஞ்சூதம்
பண்டுசொல்லப் பொரிகாரஞ் சேரக்கூட்டி
பாங்கான குருஜெயநீர் விட்டுஆட்டித்
துண்டுசொல்லா ரவியில்வைத்து வறுத்துப்போடு
துறைகோடி சூட்சமெல்லாம் வெளிவிட்டேனே.

(போ - ரை.) மேலே சொன்ன நாகவித்தையைச் சொல்லுதற்குஞ், செய்வதற்குஞ் சித்தர்களுக்குத் தெரியுமேயல்லாமல் உலகத்தாருக்குத் தெரியமாட்டாது. இனிக் கருவங்கத்தாற் செய்யப்படும் வேதையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக! எப்படியென்றால்: சுத்திசெய்த காரீயம் இரண்டெடை வாங்கி நன்றாய்ச் சிறுகக் கத்தரித்து, அத்துடன் வெடியுப்பு ஒரு எடையும், அரிதாரம் ஒரு எடையும், வீரம் ஒரு எடையும், இரசம் ஒரு எடையும், படிகாரம் ஒரு எடையும் கூடச்சேர்த்து முன் ஜெயநீரால் நான்கு நாழிகை யரைத்து வெயிலில் காயவைத்துத் தூள்படுத்தி ஒரு சட்டியிலிட்டு வறுத்துப் புட்டியில் பதனம்பண்ணி வைத்துக் கொண்டு வெள்ளி நான்கு செம்பு இரண்டு சேர்த்து உருக்கி நன்றாய் கண்விட்டாடுஞ் சமயத்தில் இந்த மருந்தில் ஒரு எடை கொடுத்தால் ஆறரைமாற்றுப் பொன்னாகும், எ - று. (13)

விட்டகுறை யுண்டானால் நூல்வந்தெய்தும்
வெளியாகக் கருவெல்லாம் தோணும்பாரு

தொட்டகுறை யிதுதானே விதிமதியுங்காணும்
சூஸ்திரந்தா னறுபதிநூல் நாட்டார்க்கில்லை
முட்டகுறை யேதென்றால் சூட்சமொன்று
முனிவர்சித்தர் இந்நூலை யொளித்தாரையா
வட்டகுறை பூரணத்தா னுதித்தார்போல
வளருமட்டா அறுநூறு மூந்நூறுந்தானே.

(பொ - ரை.) இந்த நூலானது விட்டகுறை தொட்டகுறை யுள்ளவர்க்கே கிடைக்கும். இந்த நூல் கிடைத்தபோது இரசவாதத்தின் சூட்சமெல்லாம் வெளிப்படையாய்த் தெரியவரும். ஆனால் இது உலகத்தார்க்குச் சித்தியாகாது இந்தநூலை முனிவர்களும் சித்தர்களும் வெளிவிடாமல் மறைத்து வைத்தார்கள் நானோ வெளிப்படையாய்ச் சொல்லிவிட்டேன். ஆகையால் இதில் சொன்ன வண்ணம் செய்து அனுபவித்த இரசவாதிகளுக்கு காய சித்தியுண்டாகும், எ-று. (14)

தானென்ற திருநடனம் செய்தவீசன்
தான்சொன்ன முறைசரக்கின் மைந்தாகேளு
தேனென்ற மொழியுடையாள் பாதத்தாணை
தேசத்தோர் தங்களுக்குக் கொடுக்கவேண்டாம்
மானென்ற சிவகாமி யென்தாய்பூசை
அர்ச்சித்து இந்நூலை வணங்கிப்பாரு
கோனென்ற வருள்வெளியாஞ் ஞானவாக்குங்
குடியிருந்தாள் மனோன்மணித்தாய் கூறினளே.

(பொ - ரை.) உலகத்தோர் உஜ்ஜீவிக்கும் பொருட்டு ஆநந்தத் தாண்டவம் செய்தருளிய சிவபெருமானனவன் தனது திருவாய்மலர்ந்து பிரசாதித்தருளிய சரக்குவேதைகளே இந்நூலில் சொல்லப்பட்டிருக்கின்றன. இதை சிவசத்தியின் திருவடிகளில் சத்தியமாக உலகத்தாருக்குக் கொடுக்க வேண்டாம். ஆனால் மாணக்கனாகிய நீயும் மேற்படி சத்திக்கு அர்ச்சனை, வந்தனை, வழிபாடுகள் செய்து நமஸ்கரித்துப் பார்க்கவேண்டும். ஏனென்றால்

எல்லாருக்குந் தலைவியாகிய மனோன்மணித் தாயானவள் என்னுடைய வாக்கின்கண் குடியிருந்ததினால் சொல்லப்பட்டதாகையால், எ - று. (15)

---

## துருசி வேதை

கூறினதோர் துருசினுட ஆட்டைக்கேளு
குன்றுபோற் றுருசுவொரு குன்றிவாங்கி
மாறியதோர் சிமிள் புடைக்கா லரைத்துப்பூசி
மைந்தனே சிறுபுடத்திற் றுவளநீரும்
ஆறியதோர் வெண்கண்டர் கொப்புமுண்டோ
ஆச்சரியங் கோடான கோடிவித்தை
தேரியதோர் வெண்கண்டர் களஞ்சிநாலு
சேர்த்திடுவாய் சூதம்ரெண்டு வீரமொன்றே.

(பொ - ரை.) இனி மயில்துத்தத்தால் செய்யப்படும் வேதை வருமாறு ! மயில்துத்தம் பெரியகட்டியாக ஒன்று வாங்கிச் சிமிள் என்றும் ஒருவகை மிருகத்தின் கார்குளம்புச் சீவியதூளை அரைத்துப்பூசி லகுபுடம் போட்டால் அந்த மயில்துத்தமானது வெண்மை நிறமாய்ப் பூத்துப்போகும், இங்ஙனம் ஆறினபின் நீற்றவெண் கண்டராகிய துருசுபற்பத்தைக் கொண்டு செய்கின்ற வேதைகள் அநேகமுண்டு. அவற்றில் ஒன்றுமாறு ! மேற்படி துருசு பற்பம்-4, கழஞ்சும் இரசம் 2 வராகனெடையும் வீரம் 1-வராகனெடையும் சேர்க்கவேண்டும் (16)

ஒன்றுகுங் கந்தியுடன் பாதிகாரம்
ஒக்கவே குருஜெபநீர் தன்னலாட்டி
நன்றாகக் காய்ந்தபின்பு வறுத்துப்போடு
நான்சொல்லக்கூடாது வேதைப்போக்கு
மன்றுகும் வெண்கண்ட ரெடைக்குரெட்டி
பாய்ச்சுவா யிரதமது வீரமொன்று
மன்றுகுங் காரீய பற்பமொன்று
வார்த்தரைப்பாய் செயநீரால் வைத்துக்கொள்ளே.

(பொ - ரை.) நெல்லிக்காய்க்கந்தகம் ஒருவராகனெடையும் வெங்காரம் அரை வராகனெடையுஞ்சேர்த்து முன்சொன்ன சுத்த சங்கைக் குருஜெயநீரால் நாலுஜாமம் அரைத்து நன்ருய்க் காய்ந்த பின்பு அடுப்பின்மேல் சட்டிவைத்து நன்ருய் வறுத்துப்போட வேண்டும். பிறகு அதைக்கொண்டு வேதை மார்க்கப்படியே செய்துக்கொள்ளவும். பிறகு முன்சொன்ன திருசுபற்பம் ஒரு எடைக்கு இரண்டெடை இரசமும் வீரம் ஒரு எடையும் காரீயபற்பம் ஒரு எடையும் எடுத்து முன்செயநீரை விட்டு நாலுநாழிகை பரியந்தம் நன்ருயரைக்க வேண்டும், எ - று. (17)

கொள்ளவே ஜெயநீரால் மாட்டுமாட்டு
கோடான கோடிதொந்தம் விள்ளொணுது
மெள்ளவே நாகத்தின் கட்டுக்கேளு
வெண்கண்டர் மால்தேவி காரர்சாரம்
அள்ளவே குருஜெயநீர் விட்டுக்கொண்டு
ஆட்டியே நாகத்திற் பூசிவைத்துக்
குள்ளவே பத்தெருவிற் புடங்காளஞ்சில்
ஓடாமற் புகையடங்கி மாண்டுபோமே.

(பொ - ரை.) மேற்படி அரைத்த மருந்தை வறுத்து வெள்ளி நாலுக்கு மருந்து ஒரு எடை கொடுத்தால் எழுமாற்றுப் பொன்னுகும் அதைவிட்டு இனி சிறுகண் துத்தநாகக் கட்டினை கேட்பாயாக! எப்படியென்ருல் திருசுசுண்ணம் அரிதாரம் வெங்காரம் நவாச்சாரம் ஆகிய இவைகளை ஒரேசமபாகமாக எடுத்து முன்ஜெயநீராலரைத்து நாகத்திற்குப் பூசிப் பத்தெருவிற் புடம்போட்டால் அந்த நாகம் மடிந்து போகும். இப்படியே ஐந்துபுடம்போட்டு எடுத்துக்கொள்ள வேண்டும். இதினுல் நாகத்தின் புகை யடங்கிப் போகும். இதைக் குருமருந்தாகக்கொண்டு வேதைகளை முடித்துக் கொள்ளலாம், எ - று. (18)

——

## அரிதார வேதை

போமென்ற அரிதாரச் சிவப்புக்கேளு
புகழ்ந்ததொரு விஷ்ணுவின் மூலிமாட்டித்
தானென்ற மால்தேவிக் கங்கிபூட்டிச்
சார்வாகச் சிறுகாடைப் புடந்தான்போடு
ஆமென்ற தாரமது சிவப்புமெத்த
ஆச்சரியம் வேதைமுக மனந்தங்கோடி
ஓமென்ற கண்டருட சிவப்புச்சொல்வேன்
உவருப்பு வெண்காரங் கூடக்கூட்டே.

(போ - ரை.) இனி அரிதாரச் செந்தூரத்தால் செய்யப்படும் வேதை வருமாறு! கருந்துளசியைப் போதுமான அளவு அரைத்து அரிதாரத்திற்குக் கவசஞ்செய்து சிறிய காடைப் புடம்போட்டால் அந்த அரிதாரஞ் சிவந்துபோகும். அப்படியான செந்தூரத்தால் அநேக வேதைகள் செய்து கொள்ளலாம். அது நிற்க, இனி மயில் துத்தச் செந்தூரத்தால் செய்யப்படும் வேதை வருமாறு! அதாவது முன்முடித்து வைத்திருக்கும் மயில்துத்த பற்பமும், சவர்க்காரமும் வெங்காரமுமாகச் சேர்க்கவேண்டும், எ - று. (19)

கூட்டியெல்லாஞ் செயநீரா லரைத்துக்கொண்டு
குறியான கைபாகத் துடன்வறுக்க
மாட்டியெல்லா மெடுத்துப்பார் சிவப்புமெத்த
மைந்தனே கோடிவித்தை ஆடுமப்போ
பேட்டியல்ல குருவென்ற ஜெயநீராலே
பிரபல்லிய குருக்குவழி வித்தைமார்க்கம்
பூட்டியெல்லாம் வெளியாகச் சொன்னேன்பாரு
புகழ்பெரிய வெடியுப்பின் சுண்ணங்கேளே.

(போ - ரை.) முன் சொன்னவைகளை யெல்லாஞ் சேர்த்து முன் முடித்துவைத்துள்ள ஜெயநீரா லரைத்துச் சட்டியிலிட்டுக் கைபாகந் தவறாதபடி வறுத்துச் சற்று ஆறவிட்டு எடுத்துப்பார்த்

தால் முருக்கம்பூப்போல் செம்மைநிறத்தோடு கூடிய செந்தூர மாகும். அப்படி செய்துமுடித்த செந்தூரத்தால் அநேககோடி இரசவாதங்கள் செய்துகொள்ளக்கூடும். இவைகளுக்கெல்லாம் தாயைப் போலிருப்பது முன்முடித்து வைத்திருக்கின்ற ஜெயநீரே யாகும். அந்தச் செயநீரைவிட்டால் ஒன்றும் ஆகாது ஆகையால் இரசவாதிகளே நீங்களெல்லோரும் அந்தச் ஜெயநீரை அவமதித்து விட்டுவிடவேண்டாம். இதுநிற்க, இனி வெடியுப்புச் சுண்ணத் தால் செய்யப்படும் வேதையைச் சொல்லுகின்றேன் நீ கேட்பாயாக, எ - று. (20)

கேளப்பா வெடியுப்பு சீனம் நேராய்
  கெடியான குருஜெயநீர் விட்டுஆட்டி
நாளப்பா காயவிட்டு வறுத்தாயானல்
  நன்றான வெடியுப்பு சுண்ணமாச்சு
வாளப்பா சாரமிட்டுச் செயநீர்வைத்தால்
  மக்களே கோடான கோடிவித்தை
தேளப்பா கொடுக்கு பாஷாணமார்க்கம்
  திரஞ்சொல்வேன் திரஞ்சொல்வேனன்றுய்த்தானே.

(போ - ரை.) வெடியுப்பு ஒரு பலமும், படிகாரம் ஒரு பலமும் நிறுத்து முன்ஜெயநீரால் நாலு நாழிகை பரியந்தம் நன்றாயரைத்து வெயிலில்வைத்து நன்றாய்க் காய்ந்தபின்பு சட்டியிலிட்டுச் செய் பாகந் தவறுதபடி வறுப்பாயானல் அந்த வெடியுப்புச் சுண்ண மாகும். அந்தச் சுண்ணம் ஒரு எடையுமாகச் சேர்த்து இந்தச் செயநீராலரைத்துக் குழம்பாக்கி வைத்துக்கொண்டு வெள்ளி-2, தாமிரம் ஒன்று உருக்கிச் சுருக்குக் கொடுத்தால் நல்ல பொன்னு கும். இனி இதைவிட்டு இனிக் கொக்குப் பாஷாணத்தின் வேதை யைச் சொல்லுகின்றேன், எ - று. (21)

———

## கொக்குப் பாஷாணவேதை

தானென்ற அப்பிரேகம் வெடியுப்பு சினஞ்
சாரமொடு வெண்காரம் மடையன் காந்தன்
வேனென்ற உவருப்பு ரோமநீரும்
வீரமுட னென்றாக விரைந்துகூட்டி
வானென்ற ரவிமுகத்திற் காயவைத்து
வரிசையுடன் உப்பிலப்பா யெரித்துவாங்கே.

(போ - ரை.) கிருஷ்ண அப்பிரகம் ஒரு எடையும், வெடியுப்பு ஒரு எடையும் மயில்துத்தம் ஒரு எடையும் எழு ஊசிபிடிக்குங் காந்தம் ஒரு எடையும் சவட்டுப்பு ஒரு எடையும் பூநீறு ஒரு எடையும் வீரம் ஒரு எடையுஞ் சேர்த்து முன் ஜெயநீராலரைத்து வெயிலில் காயவைத்து ஒரு சட்டியில் உப்பு கொட்டி அந்த உப்புவுக்கு நடுவே இந்தத் துளைவைத்து மேல்சட்டி மூடிச் சீலமண்செய்து எரிக்கவேண்டும், எ - று. (22)

வாங்கவே தீபமொரு சாமமட்டும்
மறுநாள்தான் கமலவன்னி சாமமொன்று
தாங்கவே ஆறவைத்துப் பாருநீதான்
சாந்தப்போ லதுகட்டுந் தன்னைச் சொன்னேன்
எங்கவே வேண்டாங்காண் வாதியென்றால்
இந்தமுறை செய்தவனே யோகிஞானி
நீங்கவே வறுமையெல்லாந் தவருண்டேபோம்
யொளியான பாலதையடா யிந்தநூலே.

(போ - ரை.) மேலேசொன்ன சட்டியை அடுப்பிலேற்றி ஒரு சாமம் வரைக்கும் தீபாக்கினியாகவும் மறுநாள் ஒரு சாமம் கமலாக்கினியாகவும் எரித்து சாங்கசீதளமாக ஆகிறவரைக்கும் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்தால் மேலேவைத்த மருந்துகள் ஒன்றாய்க் கட்டியிருக்கும். அதையெடுத்து வைத்துக்கொண்டு இரசவாதக் கிரமாலங்காரப்படி செய்துகொள்ளவேண்டியது. ஆனால் மேலே சொன்ன செய்பாகங் கைபாகங்கள் எரிப்புத்திட்டம் முதலிய

வற்றை உணர்ந்து செய்வோன், வாதியும், யோகியும், ஞானியுமே யாவான். இதனால் அவனை வருத்திக்கொண்டிருந்த தரித்திர முழுமையும் விலகிச் செல்வமுடையவனாவான் ஆனாலும் நான் சொன்ன இந்தவழி மிகவும் உயர்ந்ததாகும், எ - று. (23)

இந்தநூல் சூத்திரந்தான் அறுபதப்பா
  இயம்பினேன் கருக்குருவும் வெளியதாகும்
முந்திநூ லறுநூறுஞ் செப்பினேன்பார்
  முனையெற்ற திருவெல்லாம் பனிபோலாக
விந்தநூல் செய்பாகங் கைபாகமெல்லாம்
  வெளியாச்சே யென்றுசித்தர் மெச்சிக்கொண்டு
அந்தநூல் போலல்ல வென்றுபேசி
  ஐயையோ யிந்நூலை யொளித்தார்காணே.

(போ - வை.) நான் சொல்லி வைத்திருக்கின்ற அறுபது பாடல்களைக் கொண்ட இந்தச் சூஸ்திரத்தில் இரசவாதத்தைக் கைகூட்டும்படியான குருஜெயநீரை மற்றவர்கள்போல் ஒளிக்காமல் வெளிப்படையாய்ச் சொல்லிவிட்டேன் இதற்கு முன்னே அறுநூறு பாடல்களைக்கொண்ட ஒரு நூலுஞ் சொல்லியிருக்கிறேன். ஆனாலும் அந்த நூலைப் பார்க்கிலும் இந்தச் சூஸ்திரம் மிகவும் வெளிப்படையாகப் பேசப்பட்டிருக்கின்றதென்று சித்தர்களெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து மெச்சி இந்தச் சூஸ்திரத்தை ஒளித்துவிட்டார்கள், எ - று. (24)

காணப்பா கோடிவித்தை செய்யும்நூலைக்
  கருவென்று லோகத்தோர் விட்டார்சொன்னேன்
பூணப்பா தினந்தோறும் பூசைசெய்து
  புகழ்ந்துவைத் தெடுத்தடக்கம் பண்ணிவைத்தார்
தோணப்பா யிந்நூலைச் சூத்திரந்தான்கிட்ட
  தொண்டு பண்ணி நடந்தாலும் கொடுக்கமாட்டார்
பேணப்பா நூல்தன்னைக் கொடுத்தாயானால்
  போய்நரகில் விழுவதுண்மை பெருமைபோச்சே.

(போ - ரை.) இங்ஙனம் அநேகமான வித்தைகளைச் செய்வ தற்குத்தக்க சாமர்த்தியத்தைக் கொடுக்கும் இந்த நூலை உலகத்த வர்களெல்லாம், (இது சொல்வதெல்லாம் கருவாற் செய்யப்படும் வேலையென்றெண்ணி) இதைப் பதனம்பண்ணுமல் விட்டுவிட்டார் கள். நல்ல பரிபாகத்தை வாய்ந்த மாணுக்கனுகிய நீயோ அப்படி செய்யாமல் சித்தர்கள் எப்படி அடக்கம் பண்ணிப் பூசை செய்கின் ருர்களோ அப்படியே செய்து வரவேண்டும் ஆனுல் சித்தர்கள் இந்நூலை ஒருவருக்கும் கொடுக்கமாட்டார்கள் அப்படியே நீயும் ஒரு வருக்கும் இந்தச் சூஸ்திரத்தைக் கொடுக்கவேண்டாம். ஒருக்கால் என் சொல்லைத் தவறிக் கொடுத்துவிட்டாயானுல் எழுநரகங்களிற் போய்விழுந்து வருந்துவாய், எ - று. (25)

போச்சென்று எண்ணுதே யிந்நூல்தான்கிட்டிற்
புகழ்ந்தரச வாதியென்றும் ஞானியென்றும்
ஆச்சென்று சொல்வதல்லால் வேறென்றல்ல
ஆச்சரிய மெத்தமெத்த அறிவுண்டாகும்
தீச்சென்ற தீட்சையுண்டா மவுனமுண்டாம்
நிலைத்ததொரு ஜெயநீரும் பலபேர்க்குண்டாம்
ஆச்சென்ற வித்தையும் ஆர்தான்காண்பார்
மகத்தான சூத்திரந்தான் வாய்த்தபேர்க்கே.

(போ - ரை.) இந்தச் சூஸ்திரமானது உனக்குக் கிடைக்கு மாஞல் இதற்கு முன்னர் செய்து செய்து வீணுகப்போய்விட்டதே இந்த நூலின்படி செய்தால் மாத்திரம் ஆகுமோ என்று சந்தேக எண்ணம் வைக்கவேண்டாம். இதன்பிறகு உன்னை இரசவாதி யென்றும் ஞானியென்றும் சொல்வதல்லாமல் இந்த மஹான் கையினுலேயே இரசவாதம் முடிந்ததென்பார் அதுவுமல்லாமல் இந்த நூலால் இரசவாதத்தைப்பற்றிய அறிவு மென்மேலும் விர்த்தியாகும். இதனுல் தசதீட்சைகளும், மவுனஞானமும், ஜெய நீரும் செய்கின்ற அரியமார்க்கங்கள் தானே வந்து கிடைக்கும். ஆனுல், இவைகளையெல்லாம் கிடைக்கப்பெறுவோர் மேற்படி

சுத்தகங்கை குருஜெயநீரைச் சொல்லியிருக்கின்ற அறுபது பாடல்களைக் கொண்ட சூஸ்திரத்தைக் கிடைக்கப் பெற்றவர்களே, எ - று. (26)

---

## பாஷாணவேதை

வாய்த்ததொரு பாஷாணப் போக்கைக்கேளு
மகத்தான வித்தையப்பா சொல்லொண்ணாது
ஏத்ததொரு ஊறலறச் சுண்ணநீரில்
எரித்துவிடலாகாத மிசைந்தோர்ஜாமம்
மேய்த்ததொரு லிங்கமுடன் மடையன்சீனம்
மிருதார் சிங்கியொடு அப்பிரகங்கூட்டி
காய்ந்ததொரு ஜெயநீரை விட்டுஆட்டி
கவுசித்த பாஷாணந்தனை யுரித்துப்போடே.

(போ - ரை) இனிமேல் பாஷாணத்தாற் செய்யப்படும் வேதை வருமாறு! வெள்ளைப்பாஷாணம் கட்டியாகப் பார்த்து வாங்கிக்கொண்டு வந்து கற்சுண்ணங் கொண்டுவந்து குடைவான சட்டியொன்றிற்போட்டுக் கிளிக்கட்டி மேற்படி பாஷாணத்தை அதிற் கட்டி அடுப்பேற்றித் தாளித்துத் தீமூட்டினால் அது ஒரு சாமத்திற்குள்ளாக அந்தப் பாஷாணத்திலிருக்கும் களங்கமானது அற்றுபோய் பரிசுத்தமாய் விடும். பிறகு அந்தப் பாஷாணத்தை ஒரு எடையாக எடுத்துக்கொண்டு அதற்குச் சரியாக இலிங்கம் மயில்துத்தம், படிகாரம், மிருதார்சிங்கி, அப்பிரகம், இவைகளைச் சேர்த்து மேற்படி ஜெயநீரைவிட்டு நன்றுயரைத்துச் சட்டியின் மத்தியில் வைக்கவேண்டும், எ - று. (27)

போடப்பா விருசீலே மண்ணுஞ்செய்து
புகழான அடுப்பில்வைத்துச் சட்டிமூடி
சாடப்பா விளிம்புக்குச் சீலேசெய்து
தணலூட்டுச் சாமமரெண்டு தீயம்போல
கோடப்பா திறமான பாஷாணங்கட்டுங்
கூடுகிறகுருவேதை யென்றுயானல்

நாடப்பா சுற்றியெங்கு மலேந்தாலுந்தான்
நல்லவெள்ளை பாஷாணம் யிதற்கொவ்வாது.

(பொ - ரை.) அந்தச் சட்டிக்கு மேல்சட்டிமூடி 2-சீலைமண் செய்து அடுப்பில் வைத்து 2-சாமம் வரைக்கும் தீபாக்கினியா யெரித்து ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்த்தால் அந்த பாஷாணமானது கட்டிப்போயிருக்கும் உடனே இதை யெடுத்துப் பதனம் பண்ணி வைத்துக்கொண்டு வெள்ளி நாலுக்கு இந்தப் பாஷாணத்தில் ஒன்றுகொடுத்து உருக்கினால் 5-மாற்றுப் பொன் னாகும். இப்படி யாவதற்குக் குருமருந்து எதுவென்றால் ஜெய நீரேயாகும். ஆனால் இதைப்போன்ற வெள்ளைப்பாஷாண வேதை வேறெந்த நூற்களிலுஞ் சொல்லப்படவில்லை. அப்படி சொல்லி யிருந்தாலும் இந்தப் பாஷாணத்திற்கு அவையெல்லாம் இணை யாகா, எ - று. (28)

(வேறு)

ஒவ்வாது யென்றுசொன்ன வகையேதென்றால்
உத்தமனே பாஷாண மொன்றுவாங்கி
கவ்வாது வெள்ளிய மிரண்டுசேரு
கனமான சூதமது நாலுகூட்டி
மவ்வாது வெண்கார மொன்றே யெல்லா
மாளவே யெருக்கம்பால் விட்டுஆட்டி
தவ்வாது வரைத்தெடுத்துப் பின்னுமாட்டி
யகலமாய் பில்லைதட்டி ரவிமுகத்தில் வையே.

(பொ - ரை.) நான் ஒப்பாக மாட்டாதென்று சொன்ன தற்கு நியாயத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக! அது என்ன வென்றால் மேற்படி பாஷாணத்தில் ஒரு எடையும் வெள்ளியம் இரண்டெடையும், இரசம் நான்கு எடையும், வெங்காரம் ஒரு எடையுஞ் சேர்த்து எருக்கம் பால்விட்டு நன்றாயரைத்து அகல மாகப் பில்லை தட்டி வெயிலில் காயவைக்கவேண்டும், எ - று. (29)

வையப்பா அப்பிரேக மிருதார்சிங்கி
வகையான சீனமுடன் மூன்றுங்கூட்டி
எய்யப்பா கவசமாய்ப் பொதிந்துசீலே
யியல்பாக செய்துலர்த்திச் சுண்ணமீதில்
கையப்பா சீனவுப்பு விட்டுஆட்டி
கைமுறையாய் உப்பிட்டுச் சுண்ணமிட்டுத்
தையப்பா நிர்த்தமிட்ட வாலேதனைப்போற்றிச்
சாபமென்ற நீரவன்னி தன்னை மூட்டே.

(போ - ரை.) அதின் பின்னர் சுத்திசெய்த கிருஷ்ண அப்பிரகம் மிருதார்சிங்கி, படிகாரம் ஆகிய மூன்றையும் கூட்டி முன்னே சொன்ன எருக்கம்பாலால் நன்றாயரைத்து முன்பில்லைக்குக் கவசஞ்செய்து நன்றாயுலர்த்திப் பிறகு கற்சுண்ணத்தையும் படிகாரத்தையும் முன் ஜெயநீராலரைத்து மேற்படி பில்லைக்கு மறுபடியுங் கவசஞ்செய்து ஒரு குடைவான சட்டிக்குள் உப்பைக் கொட்டி அந்த உப்பின் நடுவில் மேற்படி பில்லையைவைத்து மேலே கற்சுண்ண மிட்டுமறைத்து மேல்சட்டி மூடி அடுப்பேற்றி மனோன்மணி தாய்க்கு அர்ச்சனை, யாராதனை செய்து, சாப நிவர்த்திசெய்து அக்கினியிட்டுச் சிறுதீயா யெரிக்கவேண்டும், எ - று. (30)

மூட்டியிதை மண்திறந்து பார்க்கும்போது
உமிர்கூட்டிக் களங்கினது சத்திமெத்தச்
சூட்டியிந்தக் களங்கதனைச் சொல்லப்போமோ
சூக்ஷமெத்த கோடான கோடிவித்தை
பூட்டியிந்தப் படியெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
புகழ்ந்தரச வாதியென்று வின்னூல்பாரு
காட்டியித்த சாஸ்திரத்தைக் கொடுக்கவேண்டாம்
கங்கைதரித்தோ ரணைக்கடக்கப் போமே.

(போ - ரை.) இப்படியே எட்டுச்சாமம் வரைக்கும் கமலாக்கினியாக எரித்து ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்

நால் மிகுதியும் காரமேறிக் களங்காக மிருக்கும் அப்படிப்பட்ட இந்தக் களங்கின் பெருமையைச் சொல்ல என்னால் ஆகாது. ஏனென்றால் அந்தக் களங்கானது செவ்வையாய் முடிந்துவிடும் பட்சத்தில் இது செய்யப்போகின்ற வேதையை வேறெந்த களங்கும் செய்யமாட்டாது. ஆகையால் அப்படிப்பட்ட களங்கை நான் ஒருவனே வெளியாய்ச் சொன்னேன். மற்றவர்களெல்லாம் ஒளித்துவைத்திருக்கின்றனர். ஆகையால் நல்ல மாணுக்கனென்னும் உறுதித்திறம் பூண்டவனே, நீ இரசவாதியாயிருந்தால் இந்த நூலைப்பார். ஆனல் இந்தச் சாஸ்திரத்தை கங்காதேவியைத் தமது சடாபாரத்தில் சுமந்துகொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய திருவடிகள்மேல் சத்தியமாக நீ யாவருக்கும் காட்டவும் வேண்டாம். கொடுக்கவும் வேண்டாம். (அப்படி என்சொல் தவறிக்காட்டுவாயானல் இரசவாதமானது உனக்குச் சித்தியாகாது இது உண்மை.) எ - று. (31)

போமென்றேன் தனித்திருந்து இந்நூல்தன்னைப்
புகழ்ச்சிமெச்சி வாசித்துக் கருக்களாய்ந்து
வாமென்றே னிதுவிட்டு ஈய்ந்தாயானல்
வாய்புழுத்து நாவிருக்க மரணமாகிச்
சாவென்றேன் புத்தியுள்ளோன் விவேகமுள்ளோன்
சாகாம லிருக்கவென்றுற் கொடுக்கமாட்டார்
கூவென்றேன் சாபமது போட்டதாலே
கொடுமையாய் சூட்சத்தி லொளித்தார்பாரே.

(போ - ரை.) நான் இந்தநூலில் சொல்லியிருக்கின்ற மர்மங்களை யெல்லாம் நன்றுயாராய்ந்து பார்த்தோர்க்கு இதினுடைய உண்மை நன்ருய் விளங்கும் ஆகையால் நான் சொல்லும்போது மாத்திரமே கேட்டுக்கொண்டு பிறகு அந்நியர்க்குக் கொடுப்பாயானல், வாய்புழுத்து மரணதசையை யடைந்து சாவக்கடவாய் என்று சபித்தேன். இப்படி நான் சாபங் கொடுத்திருப்பதால், அந்தச் சாபத்தை ஏற்றுக்கொள்ள மனமில்லாத நல்ல புத்தியை யுடையவர்களெல்லாம் ஒருவருக்கும் கொடுக்கமாட்டார்கள். ஆகை

யாலல்லவா சித்தர்களெல்லாம் இதைப் பதனம்பண்ணி ஒளித்து வைத்தார்கள். இதை நீ யறியாய்போலும், எ - று. (32)

பானென்ற விரும்பினுட செம்புகேளு
பரப்பிலே விடுகாதே அடக்கிப்போடு
தானென்ற மடையன் அப்பிரகங் காந்தந்
தாங்குவா யெடைசமனுய் சங்குபாதி
வானொன்ற பழச்சாறு விட்டுஆட்டி
மைந்தனே நெடுங்கையுன் சில்லுங்கட்டி
தீனென்ற கெந்திரெண்டு சாரமொன்று
திறமான துரிசுடனே காரமொன்றே.

(பொ - ரை) இனி அயச்செம்பினுல் செய்யப்படும் வேதை வருமாறு இதை வெளிப்படுத்தாமல் பதனம்பண்ண வேண்டியது. அது என்னவென்ருல் மயில்துத்தம், அப்பிரகம், காந்தம் இவைகளை ஒரு அளவாக எடுத்து இந்த மொத்தத்திற்குப் பாதி சங்கு பாஷாணஞ் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்ருல் நன்ருயரைத்து உலர்த்திவைத்துக் கொள்ளவேண்டும். பிறகு அதை வேறே வைத்துக்கொண்டு புரையில்லாத மூசையொன்று கொண்டுவந்து அதில் கெந்தகம் இரண்டெடையும் நவாச்சாரம் ஒரு எடையும் மயில்துத்தம் ஒரு எடையும் வெங்காரம் ஒரு எடையும் சேர்க்க வேண்டும், எ - று. (33)

ஒன்ருகப் பொடிசெய்து குகையினுள்ளு
முற்றசுர பொடிமேலுந் தூவிக்கொண்டு
நன்ருக சில்லிட்டுச் சீலைசெய்து
நாற்பதெருக்குக்கிடந்தா னுலுவாட்டிச்
சென்ருக ஆற்றியெடு சுற்றியுள்ள
செம்பாகு மிதினுடைய ஆட்டோமெத்த
பன்ருகக் கோடிவித்தை யென்ருளாத்தான்
பதித்திட்டேன் சாஸ்திரத்தில் பதித்திட்டேனே.

(போ - ரை.) மேல்சொன்ன சரக்குகளையெல்லாம் பொடி செய்து அந்தப் பொடியில் பாதியெடுத்து மூசைக்குள் போட்டு மத்தியில் அரைத்த சரக்கைவைத்து மேலில் மற்றப்பாதி பொடியைப் போட்டு சில்விட்டு நாளுக்கொரு சீலையாக ஏழுசீலைமண் செய்து நாற்பது எருவில் புடம்போடவும் பிறகு ஒருநாள்விட்டு மறுநாளில் ஷ புடத்தைப்பிரித்து மூசையையெடுத்து ஜாக்கிரதையாகப் பார்த்தால் அது செம்பாயிருக்கும். அந்தச் செம்பை எடுத்துப் பார்த்து வேதைசெய்து கொள்ளவும். இவ்வேதை மிகவும் அருமையானது இதில் அநேக வித்தைகள் செய்யக்கூடுமென்று மனோன்மணித்தாய் சொல்லியிருக்கின்றனள். அந்தப்படியே நானும் இந்த சூஸ்திரத்தில் சொல்லியிருக்கின்றேன், எ-று. (34)

பதித்தவித மின்னமொன்று சொல்லக்கேளு
 பரப்பிலே விடுகாதே சூட்சமைந்தா
விதித்தவித முன்கையில் நெரிஞ்சில்ரெண்டும்
 விரைந்துள்ளு மிட்டுசிங்கி கேசரமுஞ்சேர்த்து
கதித்தவித முன்போலப் புடந்தான்போடு
 கனகமொத்த செம்பப்பா சொல்லொண்ணாது
சதித்தவித மேதுனக்குச் செம்பைக்கண்டால்
 சதாகோடி சுங்கவித்தை வேதையாமே.

(போ - ரை.) நான் இங்ஙனம் ஏற்படுத்திய வித்தை நீ நன்றாய்க் கவனித்துப் பார்த்துக் கொள்ளவேண்டியது. அதுமிற்கு இன்னொரு வகையான வேதையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக அது என்னவென்றால் அதைச்சொல்ல வெகு சூட்சமான்தாயிருக்கும் செப்பு நெருஞ்சில், மஞ்சள் நெருஞ்சில் இரண்டையுஞ் சமமூலமாகக் கொண்டுவந்து இடித்துச் சாறுவாங்கி, மிருதார் சிங்கியையும் வெள்ளைப் பாஷாணத்தையும் ஒரு எடையாக எடுத்து மேற்படி சாற்றினல் நான்கு நாழிகை பரியந்தம் நன்றுயரைத்து முன்போலவே ஒரு மூசைக்குள் போட்டு மேலே சில்விட்டு நாளுக்கொரு சீலையாக ஏழு சீலைமண்செய்து உலரவைத்து எட்டாவது நாள் காலையில் நாற்பது வறட்டியில் புடம்போட்டு ஒருநாள் ஆற

விட்டு மறுநாள் காலையில் அந்தப்புடத்தைப் பிரித்துப் பார்த்தால் அது நல்ல செம்பாகவிருக்கும் ஆனல் இச்செம்பின் பெருமையை இப்படிப்பட்டதென்று சொல்லுவதற்கு முடியாது ஆனல் மேற்படியாக முடித்த செம்பைக்கண்டால் அநேக வேதைகள் செய்யும்படியான சக்தி கைகூடும், எ - று. (35)

ஆதென்ற செம்புக்கு முன்னோர்புடத்தில்
ஆச்சரியங் களங்கெடுத்து ஆளக்கேளு
வேமென்ற களங்கொன்று சூதம்ரெண்டு
வீரமொன்று காரமொன்று ஒன்ருய்க்கூட்டித்
தாமென்ற குருச்செயநீர் விட்டுஆட்டிக்
தான்வறுக்க கோடிவித்தை தாண்டியாடும்
வாமென்ற தொழிலெவர்க்குஞ் சொல்லவேண்டாம்
வாய்பேசாதிருந்துவிடு மவுனங்காணே.

(பொ - ரை.) இந்தப்படியே செய்துமுடித்த செம்பினைப் பிறகு ஒருபுடம்போட்டு எடுத்துக்கொண்டால் ஏதாவது கொஞ்சம் களங்கமிருந்திருந்தால் அதுவுமற்றுப்போகும். பின்னர் அதையெடுத்தாளும் விவரத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக எப்படியென்ருல் மேற்படி செம்பு ஒரு எடையும் இரசம் இரண்டெடையும் வீரம் ஒரு எடையும் படிகாரம் ஒரு எடையுமாக எடுத்து இவைகளையெல்லாம் ஒன்ருகச்சேர்த்து முன் முடித்து வைத்திருக்கின்ற சுத்தகங்கைக் குருஜெயநீரால் நான்கு நாழிகை அரைத்து உலர்த்திப் பின்னர் ஆறுவிரற்கடை உயரம்கொண்ட சட்டி ஒன்றை அடுப்பிலிட்டு, அந்தச் சட்டியானது தீப்பிடித்துச் சிவந்து வருஞ் சமயத்தில் முன் அரைத்த மருந்தை அந்தச் சட்டியிலிட்டு வறுக்கவேண்டும் அப்படி வறுத்த இந்த மருந்தினல் அநேக வேதைகள் செய்து வருவதுண்டு ஆனல் இதை உலகத்தார்க்குச் சொல்லவேண்டாம். ஒருக்கால் தவறிச்சொல்லிவிடுவாயானல் முன் சாபத்திற்கு உள்ளாகிவிடுவாய் இது தவருது, எ - று. (36)

காணவே யிம்முறைகள் செய்யும்போது
காட்டாதே ஒருத்தருக்குங் கைபாகந்தான்

கோணவே பண்ணுமற் கைமறப்புசெய்து
சூஸ்திரந்தா னிருக்குதென்று சொல்லொண்ணாது
போணவே கண்காணு தடக்கஞ்செய்து
பிரபலிய வஸ்துகண்டு மகிழ்ச்சிகூர்ந்து
வேணவே ஆதார மேல்மூலஞ்சென்று
பூரணியே காரணியே தாயேயென்னே.

(போ - ரை.) மாணுக்கனுகிய நீ இதினுடைய உண்மையைச் செய்து பார்த்துத் தெரிந்துகொள்ள எண்ணம் வைத்துச் செய்யப் புகுந்தாயானுல் இதை ஒருவருக்குங் காட்டவேண்டாம் வெளிப் படையாக வைத்துக்கொண்டுஞ் செய்யவேண்டாம். இந்த இரச வாதத்தை முடிக்கும்படியான சாஸ்திரம் என்னிடத்தில் இருக் கிறதென்று சொல்லியும் உன்னை நீயே காட்டிக் கொள்ளவேண் டாம், இப்படியெல்லாஞ் செய்யாமல் மேற்படி சூஸ்திரத்தை யடக் கஞ்செய்து வைத்துக்கொண்டு ஆறுதாரத்திற்குக் கடந்திராநின்ற மேலாதாரத்தில், மூலாதார ஸ்தானத்தில் வீற்றிராநின்ற உன்மனு தேவியை தரிசித்து சர்வபரி பூரணியே! சர்வஜீவகாரணியே! என்னைப் பெற்றெடுத்ததாயே! என்று பலமுறையும் துதிசெய்ய வேண்டும், எ - று. (37)

என்னவே சதாநித்தம் மனத்தையூணி
யேறட்டா அறிவங்கே பரத்தில்மீளும்
வன்னவே காயசித்தி யாகுஞ்சொன்னேன்
மகத்தான வித்தையெல்லாம் வளரும்பாரு
அன்னமே தேகத்துக் கூட்டியாட்ட
அருள்தானே பொருளாகி யாட்டுவிப்பாய்
முன்னமே சொன்னமுறை போக்கெல்லாமபார்
மூட்டுகின்ற கைபாக முறையைப்பாரே.

(போ - ரை.) இப்படியே தினந்தோறும் உன்னுடைய மனத்தை எம்பெருமாட்டியின் திருவடிகளில் வைத்து தியானஞ் செய்வாயானுல், உன்னுடைய அறிவானது பரப்பிரமஸ்தானத்திற்

போய் அவளுடன் கலந்திருந்து மீண்டும் உன்வசமாகும். அல்லாமல் காயசித்தியு முண்டாகும். முன்சொன்ன தேவிபாத நமஸ்கார காரணத்தால் உனக்கு அநேகமான வித்தைகளெல்லாம் கைகூடும். தேகந் தங்கநிறமாம், ஆகையால் நான் உனக்காக முன்னமே சொல்லிவைத்திருக்கின்ற வழிகளையும், கைபாக செய்பாகங்களையும் நீ நன்ருய் கவனித்து பார்த்துக்கொள்ள வேண்டும், எ - று.

பாருநீ துரிசியொரு கட்டிவாங்கிப்
பண்பாக சிவந்துநின்ற பாலைமூடி
வேருநீ அரைத்துருட்டி பொதித்துக்கொண்டு
மேலாகச் சீலைசெய்து எரித்தபோதில்
சேருநீ புடம்போட்டு யெடுத்துவாங்கச்
சேர்த்திடாய் சூதம்ரெட்டி கெந்தியென்று
வாருநீ பச்சிலைநீர் விட்டுஆட்டி
வருத்துவிடும் ஆயிரத்தெண் மாற்றுமாமே.

(பொ - ரை.) இனி துருசினல் செய்யப்படும் வேதை வருமாறு:—நல்ல மயில்துத்தம் ஒரு பெருங் கட்டியாக வாங்கிக் கொண்டு வந்து செம்பாலைவேரை அரைத்து அந்தத் துத்தத்தை அதற்குள் வைத்து மேலே மூன்று சீலமண்செய்து ஐந்து வரட்டியில் புடம்போட்டு ஆறினபின்னெடுத்து அதற்கு இரண்டு பங்கு ரசமும்; ஒருபங்கு கந்தகமும் சேர்த்து முன்சொன்ன மூலிகைச் சாற்ருல் அரைத்து உலர்த்தி, அடுப்பிற் குடைவான சட்டி ஒன்றை வைத்து வறுத்துக்கொண்டால் ஆயிரத்தெட்மோற்று ஆகும்படியான வேதையாகும், எ - று. (39)

மாற்ருன குருக்களங்கு தன்னுடொன்று
மடையனேடு சவ்வீரம் காரியபற்பம்
பாற்ருன சாறுவிட்டு அரைத்துக்கூட்டி
பதருமல் வருத்தரைத்து உலரவைத்துக்
காற்ருன தாகாது செங்கலிலேயிட்டுக்
கைமுறையாய் சாமமொன்று யெரித்துஆக்

கூத்தானவேதையப்பா அதிலேசூட்சங்
கோடான கோடிதவர் கூட்டுங்காணே.

(போ - ரை.) இனிக் குருக் களங்காமாறு சொல்லப்படுகின்றது. அது எப்படியென்றால், மயில்துத்தம், வீரம், கருவங்கபற்பம் இவைகளை ஒரு அளவாகச் சேர்த்து முன்சொன்ன மூலிகைச் சாற்றால் நன்றாய் நாலுநாழிகை பரியந்தம் அரைத்து உலர்த்திச் சட்டியிலிட்டுக் கைபாகம் தவறாதபடி வறுத்து எடுத்துக்கொண்டு மறுபடியும் முன்சாற்றா லரைத்து உலர்த்தி ஒரு சட்டிக்குள் செங்கல்லை மாவுபோல் தூள்செய்து போட்டு அதின் மத்தியில் முன் அரைத்த மருந்தை வைத்துக்கொள்ளவும். பிறகு வேதை அலங்காரப்படியே அநேகமான வேதைகளைச் செய்துகொள்ளலாம், எ - று. (40)

கூடுமென்ற காரீயஞ் சூதம்நேராய்க்
கூட்டுப்பொன் னன்பாக மடையன்வீரம்
பாடுமென்ற கெந்தகமு மொன்றாய்க் கூட்டிப்
பதறாதே குருஜெயநீர் விட்டுஆட்டி
ஓடுமென்ற ரவிபுடத்தில் வறுத்துப்போடு
ஓகோ அயந்தான் செய்தாயானால்
ஆடுமென்ற சரக்கெல்லா மிதனிலாட்டு
ஆத்தாளைக் கோடித்தாற் கோடிதானே.

(போ - ரை) இனியொரு வேதை வருமாறு:—காரீயபற்பம், இரசம், அரிதாரம், மயில்துத்தம், வீரம், கந்தகம் ஆகிய இவைகளை ஒரு எடையாகச் சேர்த்து முன் முடித்து வைத்திருக்கிற சுத்த கல்லை குருஜெயநீரால் நான்குஜாமம் அரைத்து சூரியன் முகத்தில் ஒரு சட்டியை வைத்து அந்தச்சட்டி நன்றாய்க் காய்ந்தபின் அதை அந்தச் சட்டியிலிட்டு நன்றாய் வறுத்துப் பிறகு மூசையிலிட்டு கொல்லனுலையில் வைத்து ஊதினால் அது உருகி அயக்களங்காகும். இதை யெடுத்து வைத்துக்கொண்டு மனோன்மணித் தாயைப் பூசிப்பாயானால் எப்படிப்பட்ட வேதையையும் இந்தக்

களங்காற் செய்துகொள்ளலாம். அப்படி பூசை செய்யாமல் விட்டு விடுவாயானல் மேற்சொன்ன இரசவாதஞ் சித்தியரதென்பதற்கு ஆக்ஷேபனையே யில்லை, எ - று (41)

கோடியொடு ரசமெழுகு வகையைக்கேளு
குருஜெயநீர் விட்டுக் கறியுப்பை ஆட்டி
நாடியே குக்கிடத்திற் சுண்ணமாகும்
நன்ருக சுண்ணத்திற் காரசாரம்
வாடியே திரியாதே களஞ்சியொன்று
மைந்தனே சேரவொன்ருய் நுணுக்கிக்கொண்டு
தேடியே பீங்கானிற் செயநீர்விட்டுத்
திரமான துரிசாறு களஞ்சியாட்டே.

(போ - ரை) இனி ரசமெழுகு வேதைவருமாறு ! சோற்றுப்பை வேண்டியமட்டும் எடுத்துக்கொண்டு வந்து கல்வத்திவிட்டு முன் ஜெயநீராகிய சுத்தகெங்கையா லரைத்துப் பில்லை தட்டி உலரவைத்து ஒரு அகவில் வைத்து மேலும் ஒரு அகல் மூடிச் சீலமண்செய்து பத்துவருட்டியிற் புடம்போட்டால் அந்த உப்புச் சுண்ணமாகும். அந்தச் சுண்ணத்தில் வெங்காரம் ஒரு கழஞ்சும் சேர்த்து ஒரு பீங்கானில் எல்லாவற்றையும் போட்டு ஆறுகழஞ்சு மயில்துத்தத்தையும் பொடித்துக் கூடப்போட்டு முன்னே முடித்து வைத்திருக்கின்ற சுத்தகங்கை குருஜெயநீரை விட்டு மத்திக்கவேண்டும், எ - று. (42)

ஆட்டியே பீங்கானில் வைத்துக்காய்ந்து
ஐயனே வறுத்தெடுத்து செயநீர்வாங்கி
ஆட்டியே கந்தகத்தை அலரத்துக்காய்ந்த
அதைவறுத்துச் செயநீர்தா னிறக்கிக்கொண்டு
மாட்டியே இரதத்தில் விட்டுஆட்டி
மைந்தனே வறுத்தெடுத்துப் பின்னுமாட்டி
கூட்டியே வேதைக்குக் கோடாகோடிக்
குடியான ரசமெழுகின் கூத்தைக்காணே.

(போ - ரை.) இப்படி மர்த்தித்த மருந்தை வெயிலில் வைத்து நன்றாய்க் காய்ந்த பின்பு அடுப்பின்மேல் ஒரு சட்டி வைத்துத் தீயானது அந்தச் சட்டிக்கு எறியசமயத்தில் மேற்படி உலர்த்திய மருந்தைக் கைபாகப்படி வறுத்துக்கொண்டு முன்வறுத்த மருந்தையும் இதையும் ஒன்றாய் சேர்த்து இதை ஜெயநீராக இறக்கிக்கொண்டு இந்தச் செயநீரை வேண்டுமான அளவுக்குப் பாதரசங் கொண்டுவந்து அதில் விட்டு அரைத்து மெழுகாக்கி உலர்த்தி முன்போல் வறுத்துக்கொண்டு இரசவாதஞ் செய்முறைப்படியே செய்து அநேகமான வேதைகளை முடித்துக்கொள்ளலாம், எ - று.

காணவே பாஷாணக் கட்டுகேளு
  கைபாக மார்க்கவழிக் கருவைத்தானும்
பூணவே மணிமிளை துத்தந்தானும
  பூநீறு அப்பிரகம் வங்கம்சிங்கி
தோணவே கர்ப்பூர சிலாசத்துகூடன்
  சுறுக்கான நவாச்சார மிணங்கண் சீனம்
பேணவே குருஜெயநீர் தன்னிலாட்டிப்
  பேசாதே சமபாகம் வெள்ளைதானே.

(போ - ரை.) இனிப் பாஷாணக் கட்டினால் செய்யப்படும் வேதை வருமாறு! எப்படியென்றால் கருவின் மார்க்கப்படியே மணிபோலப் பரக்தொளி கொடுக்கின்ற பொன்னிமிலை, மயில் துத்தம், பூநீறு, அப்பிரகம், கருவங்கம், மிருதார்சிங்கி, கர்ப்பூர சிலாசித்து, ஆலாத்திக் கர்ப்பூரம், நவாச்சாரம், சோற்றுப்பு, படிகாரம் இவைகளை யெல்லாம் சமபாகமாக எடுத்துக் கல்வத்திலிட்டு முன்னே முடித்துவைத்திருக்கின்ற சுத்தகங்கைக் குருஜெயநீரால் நான்கு நாழிகை அரைத்து இதை வேறேவைத்துக்கொண்டு இந்தச் சரக்குகளின் மொத்த எடைக்கு சங்கு பாஷாணங் கொண்டுவந்து அதை மேற்படி ஜெயநீராலரைத்து வைத்துக்கொள்ள வேண்டும், எ - று. (44)

தானேகேள் கவிசித்துச் சீலைசெய்து
  சாமந்தான் உப்பில்வைத்து எடுத்துப்போடு

ளனேகேள் உலர்ந்தெலும்பு போலேயாடும்
உத்தமனே யிதின்சுருக்கு எதுக்குமில்லை
மானேகேள் இந்தவித்தை ஆச்சரியமாகும்
மதியூகி யறிவதுவே வாதியாவான்
மானிலத்தில் மனிதருக்கு வழங்கவேண்டாம்
மகத்தான பாஷாணக் கட்டுதானே.

(போ - ரை.) முன்னர் அரைத்து வைத்திருக்கின்ற மருந்துக்கு இரண்டாவது அரைத்த பாஷாணத்தைக் கவசஞ்செய்து மூன்று சீலைமண்செய்து ஒரு சட்டியில் உப்பைக்கொட்டி அந்த உப்பின் மத்தியில் மேற்படி கவசித்தமருந்தை ஈரத்துடனே வைத்து ஒருசாமம் வரைக்கும் சிறு தீயாயெரித்துப் பிறகு தீயை யெடுத்துவிட்டு அந்த அடுப்பின் மேலேயே ஒருநாளெல்லாம் ஆற விட்டு மறுநாளைக்கு எடுத்துப்பார்த்தால் அந்த மருந்துகள் ஒன்ருய்ச் சேர்ந்துருகி ஒரேகட்டியாய் எலும்பைப்போலிருக்கும் ஆனல் இதற்கு வேகமோ ரொம்பவும் உண்டு இதின் வேகத்தைப்போன்ற வேகம் வேறெந்த மருந்துக்கும் கிடையா தென்பதிற் சந்தேகமில்லை. ஆனலும் நல்ல மதியுள்ளவனு யிருந்தாலே வாதியாவான். ஆனலும் உலகத்திலுள்ள மனிதர்களுக்கு இந்த முறையைக் காட்டவேண்டாம். இதுவே பாஷாணக் கட்டாகும், எ - று. (45)

கட்டான பொரிகாரங் கந்தகஞ்சாரங்
கலந்து நீசமனுகக் கல்வத்திலிட்டு
மட்டான கோரக்கர் மூலிச்சாற்றில்
மெழுகதுபோ லரைத்துக் கவசஞ்செய்து
திட்டான மண்செய்து காயவைத்துத்
திறமான தோரெருவிற் புடந்தான்போடு
பட்டா கிறந்துரிசு நேராச்சூதம்
பாங்கான வீரமுடன் கெந்திகூட்டே.

(போ - ரை.) வெங்காரம், கந்தகம், இந்த இரண்டையும் சமபாகமாக எடுத்து கோரைக்கிழங்கின் சாற்ருல் மெழுகுபோல்

நன்ருயரைத்து திருசுகட்டிக்குக் கவசஞ்செய்து அதற்குமேல் மண்சிலைசெய்து காயவைத்து ஒரு எருவிற்புடம்போட்டெடுத்துப் பிறகு அதற்கு நேராக இரசம், வீரம், கந்தகம், இவைகளைச் சேர்க்க வேண்டும், எ - று. (46)

கூட்டியே வெண்கார மொன்ருய்ச்சேர்த்து
குருஜெயநீர் விட்டரைத்து வருத்துப்போடு
ஆட்டியே யிப்படித்தான் குருஜெயநீர்விட்டு
அப்பனே ஐந்துதரம் வறுத்தாயாகில்
நாட்டியே துறைநன்ருங் கோடிவித்தை
நன்ருக வேதையிலே கோடாகோடி
ஊட்டியே துரிசினுட ஆட்டைக்காணூர்
ஒகோகோ பார்த்தின்பங் காணலாமே.

(போ - ரை.) அவைகளோடு அந்த எடையின் பிரகாரமே வெங்காரத்தையுங் கூடச்சேர்த்து முன்முடித்து வைத்திருக்கின்ற சுத்தகங்கைக் குருஜெயநீரா லரைத்துக் கைபாகப்படி வறுக்க வேண்டும். இப்படியே ஐந்துமுறை குருஜெயநீர் விட்டரைப்பதும, வறுப்பதுமான கைமுறையைச் செய்து வைத்துக்கொண்டால் இதைப்போல் வேறெதுவும் வேலைதகளை முடித்துக்காட்டாது. இதுவே துருசு வேதையாகும் இதினுல் மேலான பரமவின்பத்தையுங் காணலாம், எ-று. (47)

காணலாம் பூமியிலே தோற்றமெல்லாம்
கருவென்ற வித்தல்லோ ஆதிமூலம்
பூணலா மனதுக்கு மதுவேமூலம்
புரியட்ட மூன்றெழுத்து மேகமாதி
தோணலா மாகாச வெளிக்குட்சென்று
செபமெனு மதியிரவி நடனமாடிப்
பேணலாங் குருநிழலைத் தினந்தான்போற்றி
பிடித்தவழு சித்தரென்ன பெருமைதானே.

(போ - ரை.) இப்படி முடித்துக்கொண்ட திருசின் வேதை யால் உலகத்தோற்றங்களை யெல்லாங் காணலாகும். இந்தக் கரு வல்லோ யாவற்றிற்கும் ஆதியாகவு மிருப்பது. இதுவே மன வொடுக்கத்திற்குங் காரணமாகும். வாலை மூன்றெழுத்தின் பெரு மையும் வெளிப்படும். சந்திர சூரியமண்டலங்களில் சென்று அங்கு திருவருட்டாண்டவஞ் செய்து கொண்டிருக்கின்ற குருமூர்த்தியின் திருவடிகளைக் கண்டு அதைப்பெறுமாறு அழுது அதை அடைய லாம். இப்படியே அழுகண்ண சித்தர் அழுது பெற்ற பெருமை யும் உனக்குத் தெரியுமல்லவா? எ-று. (48)

பெருமையென்ற தாம்பிரத்தின் பற்பங்கேளு
  பேசாத கருவிடையம் சொல்வேன்மைந்தா
அருமையென்ற தாம்பிரந்தான் களஞ்சிபாரு
  அதிற்பாதி காரீய மமிர்தங்கூட்டி
தருமையென்ற வெண்காரம் வீரங்கெந்தி
  ஒன்றாகக் குருஜெயநீர் விட்டரைத்து ஆட்டு
கருமையென்ற குக்கிடத்தில் தவளநீரும்
  கனகமடா வெகுகோடி காட்சிபாரே.

(போ - ரை.) இனித் தாம்பிர பற்பத்தால் செய்யப்படும் வேதை வருமாறு எப்படியென்றால் அருமையாகச் சுத்திசெய்த தாம்பிரம் ஒன்றேகால் விராகனெடை யெடுத்து அதிற்பாதி கரு வங்கபற்பமும் பாஷாணத்தையுஞ் சேர்த்து, வெங்காரம், வீரம், கந்தகம் இவைகளைத் தாம்பிர எடைக்குச் சமபாகமாகச் சேர்த்து முன் குருஜெயநீரால் அரைத்துப் பில்லைதட்டி உலர்த்தி, ஒரு அகலில் வைத்து மேலும் அகல்மூடிச் சீலைமண்செய்து உலர்த்திப் பத்து எருவிற் புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் காலையில் தூபதீப நைவேத்திய முதலிய சோடசோபசாரங்களுடன் மனோன் மணித்தாயை நமஸ்காரஞ் செய்து மேற்படி புடத்தைப் பிரித்துப் பார்த்தால் அந்தத் தாம்பிரமானது வெண்மையான வீபூதிபோ லாகும், இப்படியான தாம்பிர பற்பத்தால் அனேகமான வேதை களைச் செய்துகொள்ளலாம் இதில் எள்ளளவுஞ் சந்தேகமேயில்லை

இது தாண்டவராய மூர்த்திகள் அனுபவத்திலிருக்க நான் கண்டது, எ - று. (49)

காட்சியா மின்னமொரு தொழிலைக்கேளு
கைபாகஞ் செய்பாகங் கருவைச்சொல்வேன்
ஆட்சியாம் பொன்னிமிளை வீரங்காரம்
அந்தெடைக்கு பொன்னென்ற வப்பிரகஞ்சேர்த்து
வாசியாங் குருஜெயநீர் விட்டுஆட்டி
மைந்தனே ளுக்கிடத்தில் மடையன்போலாம்
பூச்சியாம் வேட்டுவந்தான் வைத்தகுஞ்சுப்
புதுமையொக்கும் நாகத்தின் போக்குத்தானே.

(போ - ை.) இன்னும் ஒருவகையான வேதையைச் சொல்லுகின்றேன். நீ அதினுடைய கைபாக செய்பாகங்களை நன்றாய்க் கவனித்துக் கொள்ளக்கடவாயாக எப்படியென்றால், பொன்னிமிளை, வீரம், வெங்காரம் இந்த மூன்றையும் ஒரு எடையாக எடுத்துக்கொண்டு அந்த மூன்றுஞ் சேர்ந்த மொத்த எடைக்குப் பொன்னப்பிரகஞ் சேர்த்து முன்முடித்து வைத்திருக்கின்ற குருஜெயநீர்விட்டு நன்றாய் மெழுகுபோ லரைத்துப் பில்லைதட்டி உலர்த்தி ஒரு அகலில்வைத்து மேலும் அகல்மூடிச் சீலைமண் செய்து பத்து எருவிற் புடம்போட்டு ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்தால் நல்ல துருசு வெள்ளைபோலாகும். இது ரொம்பவும் புதுமையான தொழிலாகும். இது தத்தநாகத்தின் செய்கைபோல் சிறந்ததாகும், எ - று. (50)

போக்கான வசீகரத்தின் சூட்சங்கேளு
புகழ்பெரிய ஆவின் கோரோசனை கர்ப்பூரம்
வாக்கான கண்ணனுட மூலிவேரும்
மகத்தான சந்தனமும் புனுகுங்கூட்டித்
தாக்கான மந்திரமாம் ஓம்-கிலீம்-வசியஞ்
சர்வமோகினி வாவா வென்றுபோடு
தாக்கான தில்லைநடம் ஆட்டுப்போலே
கண்டதெல்லாந் தேடிநின்று கதறும்பாரே.

(போ - ரை.) இனி வசியத்தின் சூட்சமார்க்கம் கேட்பாயாக எப்படியென்றால், மிகவும் சிறப்புற்றதான கோரோசனம், பச்சை கர்ப்பூரம், விஷ்ணுகாந்திவேர், அரைத்த சந்தனம், புனுகு இவை களை நன்றாயரைத்து மாத்திரை திரட்டிவைத்துக்கொண்டு ஓம் கிலீம் வசிய வசிய சர்வமோகினி வாவா என்று ஜெபித்து ஒரு மாத்திரையைக் கொடுப்பாயானால், நீ கண்ட ஒவ்வொரு பொரு ளும் உன் சொற்படியே நடக்கும், எ - று. (51)

பாரப்பா கிராமமொன்று கூடச்சேரில்
பார்வசியம் பரவசியம் மெட்டுமாடும்
வாரப்பா செங்கழுநீர்ப் பூச்சாறிட்டு
மயனம்போ லரைத்துலர்த்தி வைத்துக்கொண்டு
சேரப்பா மத்தியிலே திலர்தம்போடு
திறமான வசிகரத்தின் சித்தியாச்சு
காரப்பா விதைமறைத்துச் சொன்னார்சித்தர்
கருவையெல்லா மின்னூலிற் கண்டிடாயே.

(போ - ரை.) மேற்சொன்ன மந்திரத்துடன் கிராமம் என் பதையுஞ் சேர்த்து ஓம் கிலீம் சர்வ கிராமமும் வசிய வசிய சர்வ மோகினி வாவா என்று ஜெபித்தால் உலகத்தார்களெல்லாம் வசியமாவார்கள், அஷ்டமாசித்திகளையும் ஆடக்கூடும். பிறகு முன் சொன்ன மருந்துகளைச் செங்கழுநீர்ப் பூச்சாறுவிட்டு நன்றாய் மெழுகுபோலரைத்துப் பொடியாக உலர்த்தி வைத்துக்கொண்டு, வேண்டியபோது எடுத்து நல்லெண்ணெயிற் குழைத்துப் பொட் டாக இட்டுக்கொண்டால் வசியம் சித்தியாய்விடும். இவைகளை யெல்லாம் சித்தர்கள் மறைத்து வைத்தார்கள். அவர்களுடைய மறைப்பை யெல்லாம் நான் சொல்லிய இந்தநூலிற் கண்டுகொள் வாயாக, எ - று. (52)

கண்டதொரு நூல்போல வின்னூல்தன்னைக்
காசினியோர்க் கொருநாளுங் கொடுக்கவேண்டாம்
விண்டதொரு கருக்களெல்லாஞ் சொல்லவேண்டாம்
வெளியாக கனகமுறை காண்பிக்கவேண்டாம்

பண்டதொருஞ் சிவனுணை குருவினுணை
பார்வதியாள் தன்னுணை யிந்நூல்பதனம்
அண்டதொரு சிஷன்வந்து அடுத்தாலுந்தான்
அருமையுள்ள சூஸ்திரத்தை யியம்பொண்ணுதே.

(போ - ரை.) முதன் மாணுக்கத்தன்மை பூண்டுள்ளவனே நான் சொல்லும் இவ்விஷயத்தை நன்முய்க் கவனிப்பாயாக, அது என்னவென்றல் சிவபெருமானுடைய திருவடிகளினும் என்னுடைய ஆசாரியர் திருவடிகளிலுஞ் சத்தியமாகச் சொல்லுகின்றேன் நீ இதுகாறுங் கற்றுணர்ந்த நூல்கள்போலவே இந்த நூலையும் எண்ணிக்கொண்டு யாருக்கும் கொடுக்கவேண்டாம் அல்லாமலும் இதிலுள்ள மர்மங்களையாணுலும், வேதைகளையாணுலும் ஒருவருக்குஞ் சொல்லவும் வேண்டாம், உன்னையடுத்துக் காத்திருக்கும் மாணுக்கனுனுலும் என்னுடைய சூஸ்திரத்தைச் சொல்ல வேண்டாம், எ - று. (53)

இயம்பவொண்ணு நாகமொன்று சூதம்ரெண்டு
இத்துடனே சவ்வீரங் காரம்பாதி
திறம்பவே பொன்னினப்பிரகங்காலும்
நீதியென்ற வன்னிகர்ப்ப மரைதான்பூட்டி
சுயம்பவே கெந்தமுங் கால்தான்சேர்த்துத்
துடிவுள்ள குருசெயநீர் விட்டுஆட்டி
சுயம்பவே வறுத்தெடுத்துப் பின்னும் ஆட்டிக்
கைமுறையாய் முன்போலே பதனஞ்செய்யே.

(போ - ரை.) சொல்லுதற்குக் கூடாத மகிமைபொருந்திய சுத்திசெய்த சிறுகண் துத்தநாகம் ஒரு எடையும், இரசம் இரண்டெடையும், வீரம் அரை யெடையும், வெங்காரம் அரை எடையும், கந்தகம் கால் எடையும், ஆக இவைகளையெல்லாம் இம்மியும் பிசகாவண்ணம் நிறுத்தெடுத்துக் கல்வத்திலிட்டு முன்முடித்து வைத்திருக்கின்ற குருஜெயநீரால் நான்கு நாழிகை பரியந்தம் நன்முயரைத்து உலர்த்திப் பின்னர் அடுப்பித் சட்டியேற்றி

முன் அரைத்துலர்த்திய மருந்தையிட்டுக் கைபாகந் தவறுதபடி வறுத்தெடுத்து மறுபடியுஞ் ஜெயநீரா லரைத்து உலர்த்திப் பத னஞ்செய்து கொள்ளவேண்டும், எ - று. (54)

செய்யப்பா நாகம்பத் தாலேகோடி
திறமான வித்தையெல்லா மாடிப்பாரு
மெய்யப்பா மார்க்கமெல்லாம் வெளியாய்ச்சொன்னே
விள்ளாதே யொருவருக்குங் குருமருந்துங் [ன்
தையப்பாகிர்த்தமிட்ட பரனைப்போற்றித்
தாயான சிவகாமி பாதம்போற்றி
கையப்பா பிரபல்லிய வித்தையெல்லாங்
கண்டுணர்ந்து செய்தவனே காட்சிதாமே.

(பொ - ரை.) மேலே சொன்ன நாகபற்பத்தால் அநேக வழிகளாக செய்யப்படுகின்ற இரசவாதங்களையெல்லாம் நான் வெளிப்படையாக சொல்லியிருக்கும் இந்தச் சூஸ்திரப்படியே செய்து பார்த்துக் கொள்ளக்கடவாயாக ! ஆனல் வேருெருவருக் குஞ் சொல்லவேண்டாம். எப்படியிருந்தாலும் சிவபெருமானையும், அவனுடைய சத்தியாகிய சிவபெருமாட்டியையும், தியானஞ் செய்தே யொவ்வொரு வித்தையையுஞ் செய்துமுடிக்கவேண்டும். அப்படி கற்றுணர்ந்து செய்பவனுக்கே அவ்விருவருங் காட்சி கொடுத்தருளுவர், எ.- று. (55)

தாமேதான் சாஸ்திரத்தை யார்கேட்டாலுந்
தடைசொல்லி யனுப்பிவிடு சதாசிவன்றன்னுணை
வாமென்ற விந்நூல்தான் கொடுத்துநீர்தான்
வாசியுங்கோ ளென்றுசொல்லி வகைசொல்லாதே
ஆமென்ற கருக்களெல்லா முணர்ந்துகொண்டு
அடக்கமாய்ச் செய்தொழிலின் அருமைபாரு
ஓமென்ற மௌனத்தின் செய்கைபோலே
ஓகோகோ அந்தவிதம் உற்றுப்பாரே.

(பொ - ரை.) நான் சொல்லிக் கொடுத்திருக்கின்ற சாஸ்திரத்தை உனக்குக் கண்ணுனவர்கள் கேட்டபோதிலும் அவர்களுக்குக் கொடாமல் ஏதாவது தடைசொல்லி அனுப்பிவிட வேண்டியது. அப்படியே நீ செய்யவேண்டு மென்பதற்குச் சிவபெருமானுடைய திருவடிகளின்மேல் சத்தியம் வைத்திருக்கின்றேன். ஆகையால் நீமட்டுக்கும் உன்னளவில் கற்றுணர்ந்து நன்ருய் ஆலோசித்து நிதானமாயிருந்து ஒவ்வொன்றையுஞ் செய்து பார்த்துப்பின் தேகசித்தியைப்பெற்று யோக ஞானங்களைக் கைகூட்டுவித்துக் கொள்ளும் பொருட்டு, ஓம் என்ற பிரணவ மந்திரத்தை யுச்சரித்து அந்த மௌன நிலையினின்றும் உற்றுப் பார்ப்பாயாக, எ - று. (56)

உற்றுநின்ற ராசியிலே அமிர்தமுண்டு
ஒளியாமற் கேசரத்தி னுயரவேறிப்
பற்றிநின்ற யிடைபின்சுழி மூனைமுன்னென்ருல்
பாய்மரமாம் வெளியகண்ட சோதிமூலம்
பற்றிநின்ற அறிவுதனை மேலேநோக்கி
அறிந்துபார் தேசிகனைப் புகழ்ந்துகொண்டு
சத்திநின்ற பாதத்தைச் சிந்தைசெய்து
சதாசித்தம் பூரகத்தை சார்ந்துநோக்கே.

(பொ - ரை.) இங்ஙனம் மௌனநிலையைப் பொருந்தி ராசியாகிய சந்திர நிலத்திற்குச் சென்று அந்த நிலத்திலிருந்தும் உண்டாகும் அமிர்தத்தைப் பானம்பண்ணி அதைவிட்டு இடை வெளிகளிலிருக்கும் மாயைகளில் போய்ச்சிக்கி மறைந்துவிடாமல் சிதாகாசம் வரைக்குஞ்சென்று, இடைகலை, பிங்கலை, சுழிமுனை ஆகிய மூன்று சரங்களும், ஒன்ருய்ச்சேரும் இடமான அகண்ட சோதியிற் போய்ச்சேர்ந்து அங்கே உன்னுடைய அறிவை அதின் வழிப்படுத்தி அமர்ந்திருந்து அங்கே எழுந்தருளியுள்ள ஆசாரிய மூர்த்தியைக்கண்டு நமஸ்காரஞ்செய்து அதின்பிறகு லலாடஸ்தானத்திற் சென்று ஆங்குச் சிவசத்தியின் திருவடிகளைச் சிந்தித்து அநுதினமும் பூரக சரமாகவே யிருந்துகொண்டு தரிசிக்கவேண்டும், எ - று.

நோக்கவே யிருள்வெளியாம் நடனந்தோணும்
    நுணுக்கமுள்ள யிமநாத முழக்கங்காணும்
பார்க்கவே மணியோசை சங்கினோசை
    பரமகுரு நாதர்நின்ற கைலையங்கே
தாக்கவே மௌனத்தின் குளிகையங்கே
    தோணுதெல்லாந் தோணுஞ் சொரூபமங்கே
காக்கவே யெந்நாளுங் கருணைபொங்கிக்
    கடாக்ஷித்த வாலையென்ற கருத்துமங்கே.

(போ - ரை.) அப்படி தரிசித்துக் கொண்டிருந்தால் இருளானது நீங்கி வெளியானது காணப்பட்டு அங்கே திருநடன தரிசனமுந் தோன்றும். அல்லாமல், பொன்னினோசையும், மணியோசையும், சங்கோசையும், தெரியவரும். அந்தவிடத்தில் கைலாசமும், மௌனசாதன குளிகையும் வெளிப்படும். இனித் தோன்றாத பொருள்களெல்லாமும், தற்சொரூபமும், வெளிப்படும். அன்றி எக்காலத்திலும் திருவருளானது பொங்கி வெளிப்பட்டுக் கடாட்சித்து வாலையென்ற பெண் வெளிப்படுவாள், எ - று. (58)

அங்கென்ற புரியஷ்ட மெழுத்துவாசி
    ஆகார மேல்மூலத் தடக்கமங்கே
பங்கென்ற மனம்புத்தி யாங்காரமூன்றும்
    பஞ்சவர்கள் ஒத்துநின்ற பதியுமங்கே
சங்கென்ற பத்மநிதிக் கடலாலேறித்
    தவசிருந்த குகைவீடு தலமுமங்கே
மங்கென்ற கேசரமு முள்ளஞான
    வழிமார்க்க முற்றுணர்ந்த வழிகாண்பாயே.

(போ - ரை.) அங் என்று புரியஷ்டக எழுத்தால் வாசித்து மேலாதாரமூலத்தில் அடங்கி யிருப்பதும், மனம், புத்தி, ஆங்காரம் மூன்றும், பஞ்சகர்த்தர்களும், அமர்ந்திருக்கும் இடமும் அதுவேயாகும். ஆகையால் பத்மநிதிக்கடலையும், நெருப்பாறுகிய வழியையும், மார்க்கமாகக்கொண்டு ஏறித் தவசிருந்த குகை

போன்ற வீடும், ஆகாயமார்க்கமும், அடங்கியுள்ள ஞானவழியை புணர்ந்துகொண்டு அந்த வழியை நீ காணவேண்டும், எ - று. (59)

வழியான சுடர்கோடி காந்திமீறு
மதியிரவி யொன்றான மார்க்கந்தோறுஞ்
சுழியான முனையிலுறை கமலமாது
துரியமெனச் சாக்கிரத்திற் சுற்றிவேறக்
குழியான மௌனமு மொன்றாய்பற்றிக்
கூர்மைதரு மெய்ஞ்ஞான அதிதமுற்று
விழியான கண்டகண்ட சோதியெல்லாம்
வெளியான சூஸ்திரத்தின் விபரமுற்றே.

(போ - ரை) அந்தவழியில் ஆயிரங்கோடி சூரியர்கள் ஏககாலத்தில் ஒன்றாய்ச்சேர்ந்து வந்தாற்போன்ற காந்திமீறி, சூரிய சந்திரர்கள் ஒன்றாய்ச் சேரும்படியான மார்க்கந்தோன்றும். அன்றிச் சுழிமுனையென்னும் இடத்தில் வசிப்பவளான மனோன்மணித் தாயை சாக்கிராதீத ஸ்தானத்தினின்றும், திருவிளையாடல் செய்வதைக்கண்டு அவளைப் பின்பற்றிச்சென்று மௌனஞானத்தையடைந்து மெய்ஞ்ஞானி யென்கிற பேரையுடையவனாகி சர்வமும் பிரமமெனக்கண்டு வாழக்கடவாய், அப்படிப்பட்ட நிலைகளையெல்லாம் போதித்த சூஸ்திரமும் நல்ல மங்கள குணத்துடன் நிறைவேறியது, எ - று. (60)

---

## லிங்கமெழுகு

ஈயவே யடைக்கெடைதான் தங்கமிட்டு
இதில்தங்க மிட்டுருக்க வேறுமாற்றும்
மாயவே யில்லாவிட்டால் புத்தோட்டினூது
அப்பவல்லோ வேதையிது வென்னசொல்வேன்
காயவே ஜாதிலிங்க மெழுகுகேளு
கருங்கோழி முட்டையிலே பணம்போல்துவாரம்
பாயவே பணவெடையொன் றரைதானப்பா
பச்சைநல்ல கர்ப்பூர முட்டைதாக்கே.

(போ - ரை.) இனி வேறுவகையாக இலிங்கமெழுகால் செய்யப்படும் வேதைவருமாறு, எப்படியென்றால் கருங்கோழிமுட்டை ஒன்று வாங்கிக்கொண்டுவந்து அதிலேயொரு துவாரஞ்செய்து அந்தத் துவாரத்தில் பச்சைக்கர்ப்பூரம் பணவெடை ஒன்று ஷை முட்டையில்போட்டு மேலே அந்த முட்டையின் ஓட்டைக்கொண்டே மூடவேண்டும். அப்படிமூடி நாளுக்கொரு சீலையாக எழுநாளைக்கு எழுமண் சீலைசெய்யவேண்டும்.

ஆனால் வேதையின் திருஷ்டாந்தமாய் பாரு, எது வேதை மருந்தோ அந்தமருந்தின் எடைக்கெடை தங்கமிட்டுருக்கிப் பார்த்தால் மாற்றுக்காணும்; அதைப் பரீட்சித்துப் பார்த்துக்கொள்ள வேண்டும். தங்கமென்பது செம்பு. (1)

தாக்கியே ரவியில்வைப்பாய் மெழுகதாகும்
　தயவாக மெழுகெடுத்து லிங்கத்திற்பூசி
வீக்கியே விளக்கினிலே பிடிக்கும்போது
　மெழுகாகு மதில்தங்கங் கூட்டிக்கொண்டு
ஆக்கியே வெள்ளி செம்பிற் சேர்த்துகொண்டு
　அப்பனே வதிற்பத்துக் கொன்றுசேரு
பாக்கியமே பண்டாச்சு இனிமேலென்ன
　பண்பான அரிதாரக் கட்டுகேளே.

(போ - ரை.) அப்படி எழுசீலை செய்திருக்கின்ற முட்டையை வெயிலில் வைத்துக்கொண்டு வந்தால், எத்தனை சீலை செய்திருக்கின்றதோ அத்தனைநாளில் அந்த முட்டைக்குள்ளிருக்கும் கர்ப்பூரம் மெழுகாயிருக்கும். அந்த மெழுகை யெடுத்து ஒரு பலம் இலிங்கத்தைச் சுத்திசெய்து வைத்துக்கொண்டு அந்த மெழுகை ஷை இலிங்கத்திற்குப்பூசி விளக்கினில் வாட்டினால் அந்த லிங்கம் மெழுகாகும். அந்த மெழுகுக்குச் சரியெடை தங்கங்கூட்டி வைத்துக்கொண்டு, வெள்ளி இரண்டெடை, செம்பு நாலெடை சேர்த்துருக்கி அது உருகிக் கண்விட்டாடுஞ் சமயத்தில் முன் இலிங்க மெழுகைப் பத்துக் கொன்று கொடுக்க ஒன்பது மாற்றுகுவதான பொன்னாகும். ஆகையால் இனி அப்படி முடிந்த பொன்னால்

சொம்பவும் செல்வமுடையவர்க ளாவார்கள். இனி அரிதாரக் கட்டினுற் செய்யப்படும் வேதையை நீ கேட்பாயாக, எ - று. (2)

---

## அரிதாரக்கட்டு

கட்டான வரிதாரங் குழிகல்லிட்டு
  கருதியே சாருயம் விட்டரைப்பாய்
மட்டாக ஜாமமிரண் டரைத்தபோது
  வழிக்கையிலே வேளைச்சார் மூன்றுதுளிவிட்டு
தட்டாக வில்லைரவி காயவைத்து
  தனிசாயுருவி சாம்பல் பாண்டத்திட்டு
இட்டாகவில்லை யதுமேலுஞ் சாம்ப
  விட்டுடனே சீலைமண்செய் தடுப்பிலேற்றே.

(போ - ரை.) தாளகம் ஒரு கட்டியாகக் கொண்டுவந்து சுத்தி செய்து கல்வத்திலிட்டுப் பொடித்துப் பட்டைசாருயம் விட்டு இரண்டு சாமம்வரைக்கும் நன்ருயரைத்து மெழுகுபதமாய் வழிக்கிற சமயத்தில் வேளைச்சாறு மூன்று துளிவிட்டு மத்தித்துப் பில்லை தட்டி வெயிலில் வைத்துக் காயவைத்து நன்ருய்க் காய்ந்தபிறகு நாயுருவிசமூலம் சாம்பலாக்கி ஒரு சட்டிக்குள் போட்டு அந்தச் சாம்பலின்மேல் பில்லையை வைத்து மேலுஞ் சாம்பல்போட்டு மேலேயொரு சட்டிமூடிச் சீலைமண்செய்து உலர்த்தி அடுப்பி லேற்றவேண்டும், எ - று. (3)

---

## வெடியுப்பு மெழுகு

ஏற்றியே ஆவாரை விறகுகொண்டு
  இருசாமந் தீயெரிக்கக் கட்டிப்போச்சு
ஆத்தியே செம்புபத்துக் கொன்றிவை யொன்றிய
  வாச்சரியம் ஆருடனே செப்பப்போமோ
மாத்தியே சார்வதற்கு வகையைக்கேளு
  மைந்தனே வெடியுப்பு புளிநவாசாரம்

தேத்நியே சூடன் துரிசு சீனுகாரம்
சேர்த் தரைக்க வொருமெழுகதாமே.

(போ - ரை.) அங்ஙனம் அடுப்பிலேற்றிய சட்டியை ஆவாரம் விறகினல் இரண்டு சாமம் வரைக்கும் நன்ருயெரித்துப் பிறகு இறக்கி ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப்பார்த்தால் கட்டிப் போயிருக்கும். அந்தக் கட்டில் செம்பு பத்தெடையுருக்கி அதில் ஒரு எடை கொடுத்தால் எட்டரைமாற்றுப் பொன்னுகும். இனி இதைவிட்டு வெடியுப்பு மெழுகாற் செய்யப்படும் வேதையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக! எப்படியென்ருல் வெடியுப்பு, புளி, நவாச்சாரம், கர்ப்பூரம், மயில்துத்தம், சீனுகாரம் இவைகளையெல் லாம் சமபாகமாகச் சேர்த்து அரைத்தால் அந்தச் சரக்குகளெல் லாம் ஒன்ருய் ரேசித்து மெழுகாகும், எ - று. (4)

மெழுகாலே சரக்கெல்லாங் கட்டும்கட்டும்
மெழுகுக்கோர் யோகமது கேளுகேளு
குழுவான சுண்ணும்பு முப்புமாக
கொண்டரைத்து சீலையிலே பூசிக்கொண்டு
வழுவழுப்பு வாராமல் மெழுகுபோலே
வாகாக நாலுமிந்த சீலைமண்ணும்
கருகருப்பாய் காய்ச்சியே காயவைத்து
கருவாலி புடமிடவே கட்டும்பாரே.

(போ - ரை.) மேற்சொன்ன மெழுகு முடிந்ததினல் சரக் கெல்லாம் கட்டிப்போகும். ஆனல் அந்த மெழுகைப் பிரயோகிக் கும் விதத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக! அது எப்படியென் ருல், கற்சுண்ணத்தையும் சோற்றுப்பையும் நன்ருயரைத்துச் சீலைக் குப்பூசி அந்தச் சீலையை மேற்படி மெழுகுக்குக் கவசித்து அதின் மேல் சீலைமண் நான்கு செய்து வெயிலில் காயவைத்துக் குக்குட புடம் போடவேண்டும், எ - று. (5)

---

## பாஷாண கட்டு

கட்டுமப்பா கிருஷ்ண துளசிசாற்றால்
 கருதியரை வெள்ளைபாஷா ணத்தைமூடி
மூட்டுமப்பா செம்பு கிண்ணத்தில்வைத்து
 மூன்றெருவிற் புடமிடவே புகையடங்கி
கட்டுமப்பா விப்படியே மூன்றுபாகங்
 கண்டிட்டு குகையில்வைத் துருக்கிசெம்பி
லிட்டுமப்பா பத்துக்கொண் றிட்டுப்பாரு
 இதன்வயது பத்துமாற் றென்றுகூறே.

(போ - ரை.) நன்கு யாராய்ந்தெடுத்த வெள்ளைப் பாஷாணக் கட்டியொன்று கொண்டுவந்து கருந்துளசிச் சாறுவிட்டு மெழுகாகும் வரைக்கும் அரைத்து வழித்து ஒரு செப்புக் கிண்ணத்தில் வைத்து மேலுக்கும் செப்புமூடி மண்சீலைசெய்து மூன்றெருவிற் புடம்போட்டால் புகை யடங்கிப் பாஷாணங் கட்டிப்போகும். மறுபடியும் இப்படியே மூன்றுமுறை செய்து வைத்துக்கொண்டு சுத்திசெய்த செம்பினை மூசையிலிட்டுருக்கி அது உருகிக் கண்விட்டாடுஞ் சமயத்தில் மேற்படி மருந்தில் ஒருவராகனெடை கொடுத்துப் பார்த்தாயானல் நீயே பத்துமாற்றுத் தங்கமென்று சொல்லுவாய், எ - று.

(6)

---

## வேறு - கெந்திதைலம்

கூறவே கெந்திபல மொன்றுக்கேதான்
 கூட்டவே பூநீறு மரைப்பலந்தான்
ஆறவே யாடுதிண்டா சமூலமூன்று
 யரைத்து பில்லைதட்டிரவி காயப்போட்டு
யேறவே கலசமிட்டு குழித்தைல
 மிறக்கியே பின்புகெந்தி பலங்காலப்பா
மீறவே பூநீறு பலமரைக்கால்
 மிகுதைலத் திட்டுடனே அயத்தகட்டில்.

(போ - ரை.) சுத்திசெய்த நெல்லிக்காய்க்கந்தகம் பலம் ஒன்றும் நல்லகாலத்தில் எடுக்கப்பட்ட பூநீறு பலம் அரையும், நன்ருய்ச் சுத்தப்படுத்திய நன்னிக்கல் கல்வத்திட்டு ஆடுதீண்டாப் பாளைச் செடி சமூலமிடித்து அந்தச் சாற்ருல் மேற்படி இரண்டு சரக்கையும், நன்ருய் மெழுகுபோ லரைத்துப் பில்லைதட்டிக் காய வைத்து குழித்தயில மிறக்கி வைத்துக்கொண்டு பின்பு வேறே நெல்லிக்காய்கந்தகம் பலம்காலும், பூநீறு பலம் அரைக்காலுமாக விறுத்தெடுத்து மேற்படி குழித்தயிலத்தால் நன்ருய் மெழுகுபோ லரைத்து வைத்துக்கொண்டு பிறகு நல்ல அயத் தகட்டைக் கொண்டுவந்து வைத்துக்கொள்ளவேண்டும், எ - று. (7)

தகட்டினிலே தடவிடவே யிரும்புபாத்து
 தப்பாது பத்தரையுந் தாஞுச்சப்பா
வுகட்டிலே கழுதைநீர் திருகள்ளிப்பாலு [கும்
 பயமிரண்டுஞ் சரியாக்கி றவியில்வைக்க வுப்பதா
திரும்பெடுத்து தகட்டினிலே முன்பாகம் நாலத்தொ
 வதில்விட்டு வைக்கவே செயநீராச்சு [ன்று
தகட்டினிலே பாஷாணக் கட்டிவாங்கி
 தருமட்டி சிப்பியிலிட்டு விளக்குகொண்டு.

(போ - ரை.) மேற்படி அரைத்து வைத்திருக்கும் மருந்தை இரும்புத் தகட்டுக்குத் தடவினல் அது கட்டாயமாக மாற்றுக் கொடுக்கும். அதை வைத்துக்கொண்டு வேருெரு பாத்திரத்தில் கழுதை மூத்திரத்தையும், திருகுக்கள்ளிப் பாலையும், ஒன்ருய்க்கலந்து வெயிலில் வைத்துக்கொண்டு வந்தால் அது வற்ற, உப்பாகவாகும். அந்த உப்பை எடுத்து மேற்படி தகட்டிற்கு மூடி ஒரு பாத்திரத்தில் வைத்து வெயிலில் வைத்தால் அதிலிருந்து ஜெயநீரிறங்கும். அந்தச் ஜெயநீரை வைத்துக்கொண்டு வெள்ளைப்பாஷாணக்கட்டி ஒன்றுவாங்கி ஒரு மட்டிச்சிப்பியில் வைத்து ஷெ ஜெயநீரால் அது நனையும்படி விட்டு விளக்கினல், எ - று.

விளக்கிலிட்டு நாழிகை யெரிக்க மெழுகதாகு
 மெழுகெடுத்து நாகம்பலந் தகடதாக்கி

வளக்கென்ன மெழுகிட்டு தகட்டைபொதிந்து
மைந்தனே மேதிக்கொம்பில் பன்னீர்ப்பூவிட்டு
அளக்கென்ன நாகத்தை யத்துள்ளிட்டு
வதின்மேலே பன்னீர்ப்பூ வழுக்கிமூடி
குளக்கென்ன சீலைமண் ணஞ்சுசெய்து
குருணி நெருஞ்சிமுள் கீள்மேலிட்டே.

(பேர் - ரை.) தீபாக்கினியாய் ஒருநாழிகை வரைக்கும் எரித்தால் அந்தப் பாஷாணம் மெழுகாகும். ஒருபலம் துத்தநாகத்தை தகடாய்த்தட்டி முன் மெழுகுக்குள் வைத்து ஒரு எருமைக் கொம்பில் பாதிக்குப் பன்னீர்ப்பூபோட்டு மத்தியில் மருந்தை வைத்து மேலுக்கும் பன்னீர்ப்பூவை நன்றாயமுத்திப் போட்டு அஞ்சு சீலை மண் பலமாய்ச்செய்து ஒரு குடைவுசட்டியில் மேலும் கீழும் குறுணி நெருஞ்சி முள்ளைப்போட்டு, எ - று. (9)

மேலிட்டு ஒருமரத்து விறகுகொண்டு
மேலவெரித் தருவாலை தியானஞ்செய்து
பாலிட்டு வப்பாலே போய்விடாதே
பாகமே கிட்டவிரு செந்திரிக்கும்
சாலிட்டு வெள்ளீய மோட்டிலுருக்கி
சார்பத்தில் மஞ்சாடி செந்தூரம்போடு
மேலிட்டு வெள்ளீயம் பழுத்துபோகும்
என்மகனே பாஷாண வித்தைபாரே.

(போ - ரை.) மத்தியில் முன்செம்பை வைத்து அடுப்பிலேற்றி ஒரேசாதி விறகினால் நன்றாயெரித்துக் கொம்பு செவந்து கண்விடப்போகுஞ் சமயத்தில் மேற்படி தீயையாற்றி ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பிரித்துப் பார்த்தால் அந்தப் பாஷாணம் செந்தூரமாயிருக்கும், அந்தச் செந்தூரத்தை வைத்துக் கொண்டு (1) பலம் வெள்ளீயத்தை ஒரு சட்டியிலிட்டுருக்கி அதற்குப் பத்துக்கொன்று செந்தூரம் கொடுத்தால் அந்த வெள்ளீயமானது

பழுத்துநிற்கும். இதைவிட்டு பாஷாணத்தாற் செய்யப்படும் வேதையைக் கேட்பாயாக, எ - று. (10)

---

## வேறு - பாஷாணக்கட்டு

பாரேநீ பாஷாணக் கட்டைகேளு
 படுதொட்டால் வாடிநத்தைச் சூரிச்சாறு
சேரேநீ தலையோட்டில் கீழ்மண்பூசி
 சிற்றடுப்பின் மேல்வைத்து பாஷாணக்கட்டி
நீரேநீ சருக்குகொடு கட்டிப்போகும்
 நீசெம்பு எழுக்கொன் றீவாய்வெள்ளி
சீராடு மிவைபெரிது செய்துபாரு
 செப்பாதே யொருவருக்கும் செப்பிடாதே.

(பொ - ரை.) இனி பாஷாணக் கட்டினால் செய்யப்படும் வேதையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக! அது எப்படியென்றால், ஒரு மண்டையோடு பெரிதாகப் பார்த்தெடுத்துக்கொண்டு அதன் அடிப்பக்கத்தில் மண்பூசி அடுப்பிலேற்றி தொட்டாற் சுருங்கிச்சாறும் நத்தைச் சூரிச்சாறும் கலந்து மண்டையோட்டில் பாஷாணத்தைவைத்து அதற்குச் சுருக்குக்கொடுத்தால் அந்தப் பாஷாணம் கட்டிப்போகும். அதைச் செம்புருக்கி எழுக்கொன்று கொடுத்தால் அது வெள்ளியாகும். ஆனால் இதை யொருவருக்குஞ் சொல்ல வேண்டாம் (சொல்லுவாயானால்) தாயின் திருவருள் உனக்குக் கிடைக்காதாகும், எ - று. (11)

வாதக்கோவை முற்றுப்பெற்றது.

---

# பொருளடக்கம்



பொருளடக்கம் முற்றிற்று.

---

திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை-1,—1955.

# அனுபவ வைத்திய தேவ ரகசியம்

நான்கு பாகங்கள் கொண்டது (புதிய வெளியீடு)

விலை ரூ. 10-0-0 — தபால் செலவு ரூ. 1-8-0

சாதாரணமாக வைத்திய நூல்கள் பல வெளிவந்திருக்கலாம். ஆனால் அவைகளில் வைத்தியத்தின் ஒரு சில பகுதிகளை மட்டும் கூறப்பட்டிருக்குமே யல்லாது வைத்தியர்கட்குத் தேவையான சகல விஷயங்களையும் காண்பது அரிது. 'அனுபவ வைத்திய தேவாகசியம்' எனும் புதிய வெளியீடாகிய இந் நூலானது இக் குறையைப் போக்கு மெனின் மிகையாகாது.

இந்நூலில் 'வைத்திய பொது லக்ஷணம்' என்ற தலைப்பின் கீழ் ரோகியின் லக்ஷணம், அஷ்டவித பரீக்ஷை, மருந்துகளின் வகை, மருந்து செய்யும் விதிகள், பாகக் கருவிகளின் சித்திர விளக்கம், சுத்தி முறைகள், பத்திய விதிகள், பொருள்களின் குணபாடம் முதலியவைகளை கூறப்பட்டிருக்கிறது. மற்றும் 'ரோக நிதானம்' என்ற தலைப்பின்கீழ் ஸ்திரீபால ரோகங்கள், நேத்திர ரோகங்கள் முதலிய சகல ரோகங்களைப் பற்றியும் கூறப்பட்டிருப்பதுடன் அவற்றின் வகை, லக்ஷணம், சாத்தியா சாத்தியம் முதலியவைகளையும், 'சிகிச்சா சாரம்' என்ற தலைப்பின்கீழ் மேற்கண்ட நோய்கட்கு சிகிச்சை செய்யும் விதிகளையும், அதற்குரிய கியாழம், சூரணம், லேகியம், தைலம், கிருதம், பற்பம், செந்தூரம் முதலிய மருந்து முறைகளையும் விபரமாகக் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு இவ்வொரு நூலிலேயே வைத்தியர்கட்குத் தேவையான சகல விஷயங்களும் ஒருங்கே யமைந்துள்ளபடியால் இது ஒவ்வொரு வைத்தியர்கட்கும் ஏனையோருக்கும் இன்றியமையாததாகும். இந் நூலானது வடமொழியிலும் தென்மொழியிலுமுள்ள பல ஆயுர்வேத சித்த வைத்திய நூல்களினின்றும் மொழிபெயர்த்தும் தொகுத்தும் இயற்றப்பட்டு, சுமார் 723-பக்கங்களைக் கொண்டது; உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அழகாக அச்சிடப்பட்டுள்ளது. இதற்குமுன் இதுபோன்ற வைத்திய நூல் வெளிவந்திலது.

---

கிடைக்குமிடம் :—

B. இரத்தின நாயகர் சன்ஸ்,

நெ. 57, வெங்கட்ராமய்யர் தெரு, சென்னை—1.